


அன்பே தகழியாக ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியாக நன்புருகி
ஞானச்சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்.

— பூதத்தாழ்வார்.

அக்டோபர், 1984

# ஸப்தகிரி

இதழ் 5 மலர் 15

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



---

அட்டைப்பட விளக்கம்

முகப்பில் : மகிஷாசுர மர்த்தினி

இரண்டாவது : திருமலையில் ஊஞ்சல் சேவை

மூன்றுவது : திருமலையில் சக்ரஸ்நாநம்

பின்னட்டையில் : திருச்சானூர் கோயில் தங்க விமானம்

*அச்சிடுபவர்:*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*சிறப்பாசிரியர் :*

திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

பிரதிகளுக்கு :

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.

*ஆசிரியர் :*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.

# உங்களுடன....

எதிலும் எப்போதும் புதுமையினை நாடிடும் ஒருவனுக்கு, ஒரு காலக்கட்டத்தில் அபபுதுமையும புளித்திடும்போது, அவனுக்கு இனித்திடுவது அப்பழமைதான். அடுக்கு மாளிகையில் குளிர்ச்சாதன அறையில் அமர்க்களமாக ஒருவன் அமர்ந்திருக்கும்போதுவிட, எளிமையான ஒரு பழைய கோயிலின கோபுர வாசலருகே தனித்து அமர்ந்திடும்போது அவன் உடலும் உள்ளமும் அடைந்திடும் இன்பத்திற்கு ஈடுஇணை உண்டோ! அந்தச் சூழ்நிலையில் இருக்கும் வரை, அவன் ஓர் உண்மையான மனிதனாக இருக்கின்றான். அதுபோது அவன் உள்ளத்தில் விளைந்திடும் உயர்ந்த எண்ணங்களும், செறிந்த செயல்களும் அவனை ஒரு பண்பாளனாக, பொறுப்புள்ள சமூகத்தவனாக ஆக்குகின்றன என்பது மறுக்க முடியா நிதர்சன உண்மையாகும்.

வானோங்கி விளங்கிடும் கட்டடத்திற்கு உறுதி அளிப்பது நம் கண்களுக்குத் தெரியாத அதன் அஸ்திவாரம் தான். கட்டடத்தின் சிறப்பு அதன அஸதிவாரத்தின் உறுதியைப் பொறுத்தது ஆகும். அது போன்றுதான் ஒரு நாட்டின் நாளைய எதிர்காலம் நேற்றைய நிகழ்ச்சிகளைக் கொண்டு கணிக்கப்படுகிறது. நேற்று நடைபெற்ற நிகழ்ச்சிகள் தேர்ந்த, சிரிய கோட்பாடுகளையும், குறிக்கோள்களையும் கொண்டதாக இருந்தால் இன்றைய மனிதர்கள் அவற்றை ஓர் அனுபவ அறிவாகக் கொண்டு நாளை ஒரு செழுமையான சமுதாயத்தினை அவர்களால் உருவாக்க முடியும். அவ்வபபோது நடைபெறும் நிகழ்ச்சிகள் ஒன்றாக இருந்தாலும் அவறறால பெறப்படும் அனுபவங்கள் மாறுபடுகின்றன. அதனால்தான் உலகம வாழுகின்றது அவ்அனுபவங்கள் ஆக்கபூர்வமாக அமையும்போது மாறிவரும் மனித இயல்புகளுக்கு ஏற்றவாறு எதிர்காலம் நிர்ணயிக்கப்படுகின்றது. இதனை எண்ணித்தான் சமயம், நமக்குப் பல. இலக்கியங்களை அளளித் தந்துள்ளது. அள்ள அள்ளக் குறையாத அமுதசுரபி போன்று, தலை முறைகள் பல மாறினாலும் ஒவ்வொரு காலத்திற்கும் தகுநத தேர்ந்த அறிவுரைகளையும், நற்செய்திகளையும் வழங்குவனவாக நமது சமய இலக்கியங்கள் விளங்குகின்றன. சாதாரண பக்தனையும் ஞானியாக மாற்றுவது மட்டுமன்றி, நாஸ்திகனையும் சிந்திக்க வைக்கும ஆற்றலைக் கொண்டதாக சமயச் செய்திகள் விளங்குவதை, சமீப காலத்து நமது அரசியல்வாதிகளின் செயல்களிலிருந்தும் உரைகளிலிருந்தும் அறிந்திடபெறலாம்

மனிதனின் அடிப்படை தேவைகள் உணவு, உடை இருப்பிடமாகும். ஆனால், தேவைகள் முடியும்போது அமர்தமும் விஷமாகும்; பட்டுப் பீதாம்பரமும கனகுமு; எட்டடுக்கு மாளிகையில் ஆறடி நிலமே சுகிக்கும். ஆம் தேவைகள் அடங்கும்போது மிருகமும தெய்வமாகின்றது. ஆனால் அவனுடைய அறிவுப்பசிக்கு ஒய்வு இல்லை. அதுவும், வேண்டுமளவு மனயமைதியினை இலக்கியங்கள் தந்திடுமபோது அவன் தன்னை மறக்கத் துணிகின்றான்; உலகைத் துறக்க தீர்மானிக்கிறான். இது நமது சமய இலக்கியங்களின் மாட்சிமையாகும்.இந்து சமய இலக்கியங்களின் இதயத் துடிப்பாக விளங்குவன வேதம் பாகவதம் பாரதம் மற்றும் இராமாயணமுமாகும். இவற்றை அடிப்படையாகக் கொண்டுதான் சமயத்தில் மேலும் பல இலக்கியங்கள் மட்டுமன்றி மற்றைய இலக்கியங்களும் பல மொழிகளில் உருவாகியுள்ளன. இது மேலும் பெருகும. இது ஒரு சமயத்திற்கு மட்டுமன்றி மற்றைய சமயங்களுக்கும் பொருந்தும். இதற்கு கிதை ஒரு நல்ல உதாரணமாக விளங்குகின்றது. கீதை இந்து சமயத்தின் சாரமாக விளங்கி, இன, நிற, இட பாகுபாடுகளையும மீறி மனித ஆன்மீகத் தாகத்தினைத் தீர்த்திடும் அமுதமாக இருப்பதால்தான் அது உலகின் பல்வேறு மொழிகளில், மொழி பெயர்க்கப்பட்டு வெளியாகி வருகிறது.

இத்தகு சிறப்பு அமையுமாறு நமது சமய இலக்கியங்களில் உள்ளதுதான் என்ன? விடை எளிதுதான். இடமும காலமும மாறுபட்டாலும அனறைய பாரதம, பாகவதம், இராமாயணங்களில் நடைபெற்ற நிகழ்ச்சிகளும், நடமாடிய மாந்தர்களும் இன்றும் நம்மிடையே இருப்பதால்தான், அருகு இருந்து அழிவைத் தேடித்தரும் சகுனிகளும், மந்திரைகளும்; கண்டதே காட்சி என விளங்கும் கம்ஸர்களும, இராவணாதியர்களும்; அறிவு இருந்தும் அதனைச் செயலபட வைக்கும் துணிவு இல்லா கும்பகர்ணர்களும், மாரீசர்களும்; பெண் மயக்கத்தால் மதி கெட்ட தசரதர்களும, இந்திராதிபதிகளும, உயர்ந்த இலட்சியமே உயர்வான வாழ்க்கையினை அமைத்திடும் என்பதைக் கூறும் தருமர்களும், இராமர்களும் நம்மில எத்தனைபபேர். புராணங்களில் வரும் மாந்தர்களும, நிகழ்ச்சிகளும், கதையை நகர்த்தவரும் அம்சங்கள மட்டுமே அன்று. கடலில் செலலும மீனவன் எவ்வளவுக்கெவ்வளவு ஆழம் மூழ்குகிறானோ அவ்வளவுக்கவ்வளவு முத்துக்கள் அவனுக்குச் சொந்தமாகின்றன. அவ்வகையில்தான் சிந்தனைக் கேற்ப. சிரிய போதனைகளை நம் புராணங்கள் வழங்குகின்றன. மகிஷாசுரனின் முடிவும், நரகாசுரனின் அழிவும் சில உதாரணங்கள் நமக்கு. ஒருவனுடைய மனயமைதி அடுத்தவனின் தீய நடவடிக்கைகளாலும், பொறுப்பற்றத் தன்மையாலும், கடமை தவறுவதாலும், சிரிய சிந்தனையை சிதற விடுதலாலும் ஊறு நேரிடுகின்றது. அதுபோது பாதிக்கப்படுபவன்-அவனைச் சார்ந்த சமுதாயம் போர்க்கோலம் கொள்கின்றார்கள். மனிதன் மனிதனாக விளங்கிடும் வரை, மாநிலம் அவனைப் போற்றும், தவறினால் அதுவே அவனுக்கு மயானமாகிவிடும்.

ஆகவே நாம் கொண்டாடும் ஒவ்வொரு சமயப் பண்டிகையின்போதும், உண்பதிலும் உடுத்துவதிலும் மட்டுமே நம்மை மூழ்கடித்துக் கொள்ளாமல், பண்டிகைகளின் பின்னணியைச் சற்றே சிந்தித்து, அதிலிருந்து ஒரு துளி வாழ்க்கை உண்மையையாவது அறிந்தாலே போதும், நாம் உயர்வதற்கு!



அண்மையில் திருமலையில் நடைபெற்ற ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் வருடாந்திர பிரம்மோற்சவத்தின்போது திருமலையில் காலையிலும் மாலையிலும் பல சமய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இதுபோது திரு. சிட்டிபாபு (வீணை) திருமதி. எம். எல். வசந்தகுமாரி (வாய்ப்பாட்டு) திரு. டி. என். கிருஷ்ணன் (வயலின்) திரு ஜி. பால கிருஷ்ண பிரஸாத் (வாய்ப்பாட்டு) ஆகியோரின் இன்னிசைக் கச்சேரிகள் குறிப்பிடத்தகுந்தனவாக அமைந்தன.



## திருச்சானூர் விமான சம்ப்ரோக்ஷணம்

அண்மையில் திருச்சானூரில் உள்ள தி. தி. தே. ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில் விமானத்தின் சம்ப்ரோக்ஷணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. கோயிலின் கருப்ப கோயிலின் விமானத்திற்கும், பலி பீடத்திற்கும் பொன் தகடு வேயப்பட்டது. இதற்காக ரூ. 65 இலட்சம் பெறுமான 35 கிலோ கிராம் சுத்த தங்கமும், 1,500 கிலோ கிராம் செம்பும் பயன்படுத்தப்பட்டன. இவ்விழாவிற்கு ஆந்திர மாநில அரசு தலைமைச் செயலாளர் திரு. பி, என். ஜெயசிம்மா அவர்கள் கலந்து கொண்டார்.

## திருமலை பிரம்மோற்சவம்

26-9-84 முதல் 4-10-84 வரை திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் வருடாந்திர பிரம்மோற்சவம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. 30-9-84 அன்று நடைபெற்ற கருட சேவையின்போது சென்னையிலிருந்து ஊர்வலமாகக் கொண்டு வரப்பட்ட திருப்பதி குடை அறநிறுவனத்தாரின் கோயில் குடைகள் உற்சவருக்கு அளிக்கப்பட்டன. அன்றே, ஆந்திர மாநில அரசு சார்பில் பொன்னுடைகளை அவ்வரசு ஆளுநர் அவர்கள் இறைவனுக்குச் சமர்ப்பித்தார். இப்பிரம்மோற்சவத்தின் போது திருப்பதி கோயிலின் வருமானம் சுமார் ரூ. 67 இலட்சமாகும். இவற்றில் உண்டி காணிக்கை மூலமாகப் பெற்றது சுமார் ரூ 40 இலட்சமாகும்.

## சிறுவர் பகுதி

# கங்கையின் அன்பளிப்பு

அரித்வார் என்னும் புண்ணிய க்ஷேத்திரத்திற்குப் பெருமை தருவது கங்கா நதியாகும். இமய மலையிலிருந்து பூமிக்கு வரும் கங்கை நதி முதன் முதலாக இங்குதான் பிரவேசிக்கிறது. இங்குக் கங்கை நீர் தூய்மையாகவும் புனிதமாகவும் இருக்கும்.

இங்குப் பன்னிரண்டுஆண்டுகளுக்கு ஒரு முறை கும்பமேளா என்ற திருவிழா நடைபெறும். தமிழ்நாட்டில் உள்ள கும்பகோணத்தில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் மகாமகத்தைப் போல் இந்த கும்பமேளாவும் சிறப்புடையது.

இச்சமயத்தில் நாடெங்கிலுமிருந்து லட்சக்கணக்கான யாத்ரிகர்கள் கங்கையில் நீராட வருவர். இவர்களில் சாதுக்களும் சன்யாசிகளும் பெரும்பான்மையினராக இருப்பர்.

இந்தப் புனிதமிக்க கங்கைக் கரையில் கேசவன் என்றொரு சக்கிலியன் செருப்புகள் பழுது பார்க்கும் வேலையைச் செய்து வரலானான். கூட்டம் மிகுதியான நாட்களில் அவனுக்கு உண்பதற்குக் கூட நேரம் இருக்காது. வேலைகள் மலை போல் குவிந்து விடும். கேசவன் கூடுமான வரை வாடிக்கையாளரை அதிக நேரம் காத்திருக்க வைக்காமல் உடனுக்குடன் அனுப்பி விடுவான்.

ஒரு நாள் பக்தர் ஒருவரது செருப்பைத் தைத்துக் கொண்டிருக்கும் போது அந்த பக்தர் கேசவனிடம் பேச்சுக் கொடுத்தார்.

“நீ மிகவும் புண்ணியம் செய்தவன். கங்கா மாதாவின் அருகிலேயே நீ உட்கார்ந்திருக்கிறாய். ஒரு நாளைக்கு எத்தனை முறை வேண்டுமானாலும் நீ இதில் நீராடி மகிழலாம்” என்று கேசவனிடம் கூறினார் பக்தர்.

கேசவன் தலைநிமிர்ந்து அவரைப் பாராமல் தன் வேலையைச் செய்தவாறே, “ஐயனே, நான் பிறந்து வளர்ந்ததென்னவோ புண்ணியமிக்க இந்த ஊரில் தான். நான் வேலை செய்வதும் கங்கைக் கரையில் தான். ஆனால், இதுவரை நான் கங்கையில் ஒருமுறை கூட நீராடியதில்லை” என்றான்.

“ஆஹா என்ன அபவாதம் செய்துவிட்டாய்! இந்தப் புனித கங்கையில் நீராடுவதற்காகவே நாங்கள் நூற்றுக்கணக்கான மைல்கள் பிரயாணம் செய்து இங்கு வருகிறோம். நீயோ இதன் அருகில் இருந்தும் கூட ஒரு முறை கூட இதில் நீராடவில்லை என்று சொல்கிறாயே, இது உனக்கு வெட்கமாக இல்லையா?” என்றார் பக்தர்.

“ஆமாம், சுவாமி! வெட்கப்பட்டு என்ன பிரயோஜனம்? உங்களைப் போன்ற பக்தர்களைக் காக்கவைத்து விட்டு நான் எப்படி நீராட முடியும்? காலை 6 மணியிலிருந்து இருட்டும் வரை வேலை இருக்கிறது. அதன்பிறகு எனக்கு வீட்டு நினைவுதான் வருகிறது. எனவேதான் இந்தக் கங்கைக் கரையிலிருந்தும்கூட இதில் நீராட எனக்கு ஒருமுறைகூட வாய்ப்புக்கிட்டவில்லை” என்று அவன் கூறி முடிப்பதற்கும், அந்த பக்தரின் செருப்புகள் தைத்து முடிப்பதற்கும் சரியாக இருந்தது. அதற்குள் மேலும் இரண்டு பேர் தங்கள் செருப்புகளை வைத்துக்கொண்டு காத்திருந்தனர்.

பக்தர் கேசவனுக்குக் கூலி கொடுத்துவிட்டுப் புறப்பட யத்தனித்தார். இச்சமயத்தில் கேசவன் ஏதோ நினைத்துக் கொண்டவனாய்த் தன் வெற்றிலைப் பாக்குப் பையை எடுத்து அதிலிருந்து சில வெற்றிலைகளையும் பாக்கையும் எடுத்து அத்துடன் ஒரு நாலணா நாணயத்தையும் வைத்து பக்தரிடம் கொடுத்து, “சுவாமி, நீங்கள் கங்கைக்கு நீராடச் செல்கிறீர்கள் என்று அறிகிறேன். என்னுடைய இந்தச் சிறிய காணிக்கையைக் கங்கா மாதாவிடம் சேர்ப்பித்து விடவேண்டும்” என்றுகூறியவன், மேலும் “ஸ்வாமி, எனக்காகத் தாங்கள் கங்கா தேவியைக் கூப்பிட்டுப் பல்லாண்டுகளாக இங்கிருந்தும் நான் வரமுடியாத காரணத்தைக் கூறி நான் கொடுத்த இந்தக் காணிக்கையை ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும்” என்றான்.

பக்தர் கேசவனின் அறியாமைக்காக அனுதாபப் பட்டார். ‘கங்கா தேவியாவது, நேரில் வருவதாவது’’ என்று நினைத்தவாறு கங்கைக்குச் சென்றார். அங்குக் கூட்டம் அதிகமாக இருந்தது. அந்தப் பக்தர் நீராடி முடிக்க வெகுநேரம் ஆகிவிட்டது. நீராடி முடிக்கும் வரை கேசவனின் நினைவே அவருக்கு மறந்து விட்டது. பின்னர் நனைந்திருந்த துணிகளைப் பிழிந்துக் கட்டிக் கொள்ளும் போது தான் கேசவன் கொடுத்தனுப்பிய காணிக்கையைத் துணியில் முடிந்திருப்பது அவருக்குத் தெரிந்தது.

உடனே முடிச்சை அவிழ்த்து அதிலிருந்து காணிக்கையை எடுத்துக்

திரு. நெ. சி. தெய்வசிகாமணி
சென்னை.

வந்து இங்கு நீராடுகிறேம். அவ்வாறு இருக்க நமக்கு இந்தக் கங்கா தேவி அருள் புரியாமல் ஒரு முறை கூடக் கங்கையில் நீராடாத அந்தச் சக்கிலியனுக்குஅருள்புரிவதா?' என்று கோபம்கொண்டவராய் கேசவனிடம் அந்தச் சிலம்பைக் கொடுக்காமல் நேரே தன் ஊருக்குச் சென்று விட்டார்.

ஊருக்குச் சென்றதும் சில நாட்களில் அவருக்குப் பணமுடை ஏற்பட்டது. தம்மிடம் உள்ள தங்கச் சிலம்பை விற்கலாமென்ற நோக்கத்துடன் கடைத் தெருவுக்குச் சென்ருர். தங்க நகைகள் வாங்குவோரிடத்தில் சென்று அதனைக் காட்டிய பொழுது அவர்கள் ''இது அளவற்ற மதிப்பு உடையது. இதனை வாங்கக் கூடியவர் அரசன் ஒருவரே. அவரிடம் சென்று இதனை விற்பனை செய்து கொள்ளுங்கள்'' என்று கூறி விட்டனர்.

கங்கையில் விட்டு விட நினைத்தார். சிறிது நேரம் யோசித்த போது கேசவன் சொன்னது அவர் நினைவுக்கு வந்தது. கங்கா தேவியை அழைப்பித்து, அவன் வர இயலாத காரணத்தைச் சொல்லிக் கங்காதேவியிடமே அவன் கொடுக்கச் சொன்னது நினைவுக்கு வந்தது.

இது ஒரு பைத்தியக்காரச் செயல் என்று அவருக்குத் தோன்றினுலும் 'நமக்கு ஏன் வீண் பாவம்! அவன் சொன்னபடியே செய்துவிடுவோம்' என்ற எண்ணம் கொண்டவனுய், கங்கையில் மீண்டும் இறங்கி முழங்கால் அளவு நீரில் நின்று கொண்டு, ''அம்மா, கங்காதேவி உன்னுடைய கரையில் உட்கார்ந்து வேலைசெய்யும் கேசவன் தனக்கு நீராட நேரம் கிடைக்காமையினுல் இந்தச் சிறு காணிக்கையைஎன்னிடம் கொடுத்து அனுப்பியிருக்கிறன். தயவு செய்து இதனை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று அந்த பக்தர் கூறினுர்.

மறுகணம் கங்கை நீரிலிருந்து ஒரு கரம் வெளியே வந்தது. பக்தர் கொடுத்த காணிக்கையைப் பெற்றுக் கொண்டு தண்ணீருக்குள் மறைந்து விட்டது.

இதை எதிர்பார்க்காத பக்தருக்கு வியப்பும் திகைப்பும் ஏற்பட்டு சற்று நேரம் ஒன்றும் தோன்ருமல் அவ்விடம் நின்று கொண்டிருந்தார். அச்சமயத்தில் மீண்டும் அந்தக் கரம் நீருக்குள்ளிருந்து வெளியே வந்தது. இப்பொழுது அந்தக் கையில் அழகிய தங்கச்சிலம்பு ஒன்று இருந்தது.

''பக்தா, கேசவனிடம் அவன் அன்புக்கு நாம் மெச்சியதாகக் கூறி நாம் கொடுக்கும் இந்த அன்பளிப்பையும் அவனிடம் சேர்ப்பித்து விடுக'' என்றுகூறிஅந்தச்சிலம்பை பக்தரிடம் கொடுத்து மறைந்து விட்டது.

தங்கச் சிலம்பை பார்த்ததும் பக்தரின் மனம் மாறிவிட்டது. 'நாம் ஆண்டு தோறும் பலவிதத் துன்பங்களை அனுபவித்து நடையாக நடந்து

பக்தர் கங்கா தேவியிடமிருந்து கேசவனுக்குத் தரப்பட்ட தங்கச் சிலம்பை எடுத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்ருர். அரசனிடம் அதனைக் காட்டிய பொழுது, அதன் அழகில் மயங்கிய அரசன், ''பேரழில் வாய்ந்த இந்தச் சிலம்பினுக்கு ஈடான மற்ருெரு சிலம்பு நிச்சயம் இருத்தல் வேண்டும். அதனை உடனேகொண்டு வந்து கொடுத்து, அளப்பரிய செல்வத்தைப் பெற்றுச் செல். மற்ருெரு கால் சிலம்பை நீ கொண்டு வராமல் போனுல் உனக்கு மரண தண்டனை தரப்படும்'' என்ருன்.

இதைக் கேட்டதும் அந்த பக்தர் நடுநடுங்கிப் போய்விட்டார். 'உடும்பு வேண்டாம் கையை விட்டால் போதும்' என்று நினைத்தார். அரசரின் தண்டனையிலிருந்து அவர் தப்ப வேண்டுமானுல் மீண்டும் கங்காதேவியிடம் சென்று மற்ருெரு கால் சிலம்பை யாசித்தல் வேண்டும். திருட்டுத் தனம் செய்த அந்த பக்தர் மீண்டும் எவ்வாறு கங்காதேவி

யிடம் செல்லமுடியும்? நேரே கேசவன் என்ற அந்தச் சக்கிலியனிடமே சென்றார்.

அந்த பக்தர் சென்ற சமயத்தில் கேசவனைச் சுற்றிலும் காலணிகள் மலையெனக் குவிந்திருநதது; நிறைய பேர் அவனைச் சுற்றிலும் காத்திருந்தனர். அந்த பக்தர் வந்ததும் அவரைக் கேசவன் அடையாளம் கண்டு கொண்டான். ஆனாலும் வேலையை நிறுத்தாமல், "என்ன சுவாமி, சௌக்கியமா?" என்று கேட்டான்.

"அப்பா, நான் பெரிய அபசாரம் செய்து விட்டேன். நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று கூறி அன்று நடந்ததை விளக்கமாகக் கூறினான். பின்னர் தொடர்ந்து,

"கங்காதேவியிடம் நீ சென்று மற்றொரு காற்சிலம்பைத் தரும்படி கேட்டால் கங்காதேவி கொடுத்து விடுவாள். அதை வாங்கி வந்து கொடுத்தால் அரசரிடம் கொடுத்து அவர் கொடுக்கும சன்மானத தொகையைக் கொண்டுவந்து உன்னிடமே சேர்த்து விடுகிறேன். இந்த ஆபத்திலிருந்து என்னைக் காப்பாற்றி விட்டால் போதும்" என்று கூற,

"இப்பொழுது அளவற்ற வேலை கைவசம் குவிந்திருக்கிறது. இந்த நிலையில் எல்லாவற்றையும் பாதியிலேயே போட்டுவிட்டு உங்களுடன் நான் எப்படி வரமுடியும்?" என்று கேசவன் கூறினான்.

"அப்படியெல்லாம் சொல்லக் கூடாது. நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று காலில் விழாத குறையாக அழுதுபுலம்பினார் பக்தர்.

கேசவனுக்கு அந்த பக்தரின்பேரில் இரக்கம் ஏற்பட்டது. எனினும் கடமையை விட்டுச் செல்ல அவன் மனம் துணியவில்லை.

"ஐயா, தாங்கள் இவ்வளவு தூரம் கேட்டுக்கொள்வதால் தங்களுக்காக ஒன்று செய்கிறேன். கங்காதேவி இங்கேயே வருகிறாளா என்று பார்ப்போம்" என்றுகூறிய கேசவன் பழஞ் செருப்புகளை நனைத்து எடுப்பதற்காக வைத்திருந்த தண்ணீர் கொண்ட தகரக் குவளையின் மேல் ஓர் அழுக்குத் துணியைப் போட்டு மூடினான்.

பின்னர், "அம்மா, கங்காதேவி இந்த மனிதரைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. தயவு செய்து உன்னுடைய மற்றொரு காற்சிலம்பையும் அவருக்குக் கொடுத்து நீதான் அவரைக் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லி விட்டுத் தகரக் குவளையின் மேலிருந்த துணியை நீக்கினான்.



சமயபுரம் ஸ்ரீ மாரியம்மன்
திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன்.

என்ன ஆச்சரியம்!

உள்ளே அந்தச் செருப்பு நனைக்கும் தண்ணீரில் கங்காதேவியின் மற்றொரு காற்சிலம்பு இருந்தது. அதனை எடுத்துப் பக்தரிடம் கொடுத்தான் கேசவன்.

அதனைப் பெற்றுக் கொண்ட பக்தர், கேசவனின் காலில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து, "ஐயனே, நீங்கள் தான் உண்மையான பக்தர். எனவேதான் கங்காதேவி உங்களுக்கு அருள் புரிந்தாள்" என்று கூறித்தன் வழியே சென்றான்.



# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. பை. |
|---|---|---|
| அன்னமய்யா ஓர் அறிமுகம் | ... | 1–00 |
| பகவத் சந்தேஸம் | ... | 0–50 |
| இந்து சமயக் கையேடு | ... | 1–50 |
| ஹனுமான் | ... | 0–50 |
| கண்ணன் பேசுகிறான் | ... | 0–50 |
| மாங்கல்ய விருத்தி ஸ்தோத்திரம் | ... | 0–10 |
| சித்திர சுப்ரபாதம் | ... | 8–00 |
| ஸ்ரீவேங்கடேஸ்வர சுப்ரபாதம் (பொருளுடன்) | ... | 0–50 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | ... | 0–15 |
| சித்தாந்த சங்கரஹம் | ... | 2–50 |
| திருவேங்கட கலசம் | ... | 0–15 |
| சித்திரத் திருப்பாவை | ... | 8–25 |
| ஏழுமலை யாத்திரை | ... | 0–75 |
| ஹனுமன் கதை | ... | 2–00 |
| திருமலை வழி காட்டி | ... | 0–10 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கல்யாணம் | ... | 11–50 |
| கண்ணன் கதை | ... | 2–00 |
| நித்யாநுஸந்தானம் (வடகலை) | ... | 4–00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | ... | 4–50 |
| அபிமன்யு | ... | 2–00 |
| கிருஷ்ணனும் நரகாசுரனும் | ... | 2–00 |
| பகவத் கீதை | ... | 2–00 |

## ஆங்கிலம்

| | | Rs. Ps. |
|---|---|---|
| Administration of Temples | .. | 5—00 |
| Alamel Mangapura | .. | 0—25 |
| Ekantaseva | .. | 5—00 |
| Govinda brochure | .. | 3—00 |
| History of Tirupati Vol: II | .. | 15—00 |
| Melodies of staff notation | .. | 10—00 |
| Lord Venkateswara & Alwars | .. | 1—00 |
| Acharya Hridayam | .. | 8—25 |
| Theory of Knowledge | .. | 5—00 |
| Tirupati Sri Venkateswara | .. | 40—00 |
| S.V. Suprabhatham with meaning | .. | 0—50 |
| Heart of Bhagavatham | .. | 3—00 |
| S.V. Sachitra Suprabhatham | .. | 11—00 |
| Tirumala Temple | .. | 80—00 |
| Pilgrimage to Uttarakhanda | .. | 3—75 |
| Tiruppavai | .. | 10—00 |
| Vision of Aryan Glory | .. | 1—50 |
| Uddavageetha | .. | 5—00 |
| The Wise Minister & other stories | .. | 1—00 |
| Sree Venkateswara | .. | 1—00 |
| Vishnu Sahasranamam 999 (Namams) | .. | 1—00 |
| Harischandra | .. | 1—00 |
| Kardama & Devahuti | .. | 1—00 |
| Maharshi Valmiki | .. | 2—00 |
| Druva | .. | 2—00 |
| Bhishma | .. | 2—00 |
| Vedavyasa | .. | 2—00 |
| Tenali Ramakrishna | .. | 2—00 |
| Ganesha | .. | 2—00 |
| Thyagaraja | .. | 2—00 |
| Drowpadi | .. | 2—00 |
| Bhageerada | .. | 2—00 |
| Prahlada | | 2—00 |
| Andal | .. | 2—00 |
| Kalidasa | .. | 2—00 |
| Vadiraja | .. | 2—00 |
| Pillai Lokacharya | .. | 2—00 |
| Dhadhichi | .. | 2—00 |
| Nachikata | .. | 2—00 |
| Namadeva | .. | 2—00 |
| Garuda | .. | 2—00 |
| Ramanujacharya | .. | 2—00 |
| Narada | .. | 2—00 |
| Vedantadesikaru | .. | 2—00 |
| Why am I Hindu? | .. | 1—50 |
| Purushasuktham | .. | 2—00 |
| History of Tirupati Vol. I | .. | 15—00 |
| Homage to Kalankari | .. | 120—00 |
| Yoga & Yoga | .. | 2—00 |
| Viswamithrudu | .. | 2—00 |
| Idle child | .. | 0—05 |

## வடமொழி

| | | ரூ. பை. |
|---|---|---|
| எஸ். வி. அஷ்டோத்ரம் | .. | 0–62. |
| எஸ். வி. சுப்ரபாதம் | .. | 0–12 |
| தத்வ ஸங்க்யானம் | .. | 2–00 |

---

குறிப்பு: பிரதிகளுக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

THE WELFARE OFFICER
Publication Wing (Administrative Building)
T. T. D. TIRUPATI

# நிந்தனை

ஒருவனுக்குக் கஷ்டமும் துயரமும் ஏற்படும் போது, அவற்றின் உண்மையான காரணத்தை அறிந்து பரிஹாரத்தைத் தேடுவதற்கு முன்னதாக, தனக்கு விரோதி என்றுதான் நினைக்கும் நபர் மீது பழியைச் சுமத்தி அவரை நிந்திப்பதில் காட்டப்படும் ஆர்வம் ஒரு விசித்ரமான மனித இயல்பாக இருப்பதைக் காண்கிறோம். இதற்குக் காரணத்தை அலசிப்பார்க்கும் போது ஒருவனுக்கு ஏற்படும் துன்பத்தின் கொடுமையை விடத் தன் பகைவனுக்கு அதை அறிவதால் ஏற்படும் சந்தோஷமும், தான் ஏளனத்திற்கு ஆளாகி நிற்கும் அவல நிலையுமே அவன் கண் முன்னர் நிற்பது தெரிகிறது. ஆகவே அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், எதிரியின் மீது பழியைச் சுமத்தித் தன்னுடைய மனத்தாங்கலுக்கு உடனடியாகப் போக்குவீடைக்காணபது ஓரளவு மனச்சாந்தியைத் தருவதாக அமைகிறது.

இத்தகைய சநதர்ப்பங்களில் பழி கூறுவது சில சமயங்களில் முற்றும் நியாயமுள்ளதாக இருக்கும். ஆனால் பல சமயங்களில் பழிச்சொற்கள் சம்பநத மற்றவையாக இருப்பதன்னியில், துன்பத்தின் ஆத்திரத்தில் அப்பாவியானவன் பழிக்கப்படுவதையும்உணமைநிலையை உணரும்சந்தர்ப்பத்தில் பழிக்கப்பட்டவனைக் குறித்துப் பழித்தவன் பச்சாததாபப்படுவதையும்கூடக் காண்கிறோம்.

நிந்தனையின இத்தகைய பல நிலைகளையும வால்மீகி மஹரிஷி ஸ்ரீராமன், சீதை, கௌஸல்யை ஆகிய முக்ய பாத்ரங்களின் வரலாறுகள் சிலவற்றின் மூலமாக வெகு நேர்த்தியாக எடுததுரைத்திருக்கிறார். அவற்றை ஆராய்வது சுவையுள்ளதாக இருக்கும்.

பாற்றாந் தாயான கைகேயியினிடம் ஸ்ரீராமன் அளவற்ற அன்பும், பக்தியும், கௌரவமும் வைத்திருப்பவர் என்பதைக் கைகேயி வாயிலாக "ராமேவா பரதேவாஹம் விசேஷம் நோபலக்ஷயே", 'இராமன விஷயத்திலாவது பரதன விஷயத்திலாவது நான்விசேஷத்தை (வித்யாஸத்தை)க் காணவில்லை' என்னும் வாக்யத்தின் மூலம் வால்மீகி விளக்கி இருக்கிறார். இருப்பினும், கைகேயி ஸ்வபாவமாகவே செருக்கும், பிடிவாதமும், கோபமும உள்ளவள் என்பதை ஸ்ரீராமனுடையபலமொழிகள் அறிவிக்கின்றன. ஸ்ரீராமன் வனம் செல்லப்படவேண்டிய விவரத்தை அறியும் முன்னர், பட்டாபிஷேக ஏறபாடுகள் கைகேயியின் சூழ்ச்சியால் தடைபட்டுள்ளதை அறியாமல், தசரதன் உத்திரவுப்படி அவரைக் காண்பதற்காகக் கைகேயியினுடைய அந்தப்புரம் செல்கிறார். அங்குத் துக்கத்துடன் பரிதாபமான நிலையில் இருக்கும் தசரதனின் சோகத்தைக கண்டு திடுக்கிடும் ஸ்ரீராமன் அதற்கான காரணத்தை அறிவிக்கும்படி கைகேயியைப் பார்த்து பல கேள்விகள் கேட்கிறார். அவற்றுள், கைகேயி தன்னுடைய கோபத்தினால் தசரதனைக் குரூரமாகப் பேசிவிட்டாளா என்பதும் ஒரு கேள்வியாக அமைநதுள்ளது. இந்தக்கேள்வி கைகேயியின் ஸ்வபாவிகமான கோபத்தன்மையை ஸ்ரீராமன் அறிந்துள்ளான் என்பதை அறிவிக்கிறது. ஸ்ரீராமன் வனஞ்செல்லவேண்டுமென்றும், பரதன் பட்டம் கட்டுவிக்கப்படவேண்டுமென்றும் கைகேயி கூறிய போது, அவற்றிற்கு முழுமனதுடன் இசையும் இராமன் தசரதன் இந்தக் கட்டளையை ஏன் நேரிடையாகக கூறவில்லை என்பதை அறிய விரும்புகிறார். தவிர உடனடியாகப் பட்டாபிஷேகத்திற்காகப் பரதனை வரவழைக்க ஏற்பாடுகளைச் செய்யும்படியும் ஸ்ரீராமன் வேண்டுகிறான். பரதனுடைய பட்டாபிஷேகத்தைக் காணும் வியாஜமாக ஸ்ரீராமன் அயோத்தியில் தங்குவதற்கு விரும்புகிறாரோ என்று கைகேயி சந்தேகப்படுகிறாள். ஆகையால் இராமன் உடனடியாகப் புறப்படவேண்டுமென்றும் அவர் அயோத்தியினின்றும அகலாத வரையில் தசரதன் ஸ்நானபானாதிகளைச் செய்யமாட்டாரென்றும் கைகேயி உரைககிறாள். இந்த வார்த்தைகளால் தாக்குண்டு மஞ்சத்தில் விழுந்துவிடும் ராஜாவை இராமன் எழுப்பி உட்கார வைக்கிறார். அப்போது ஸ்ரீராமனுக்கு கைகேயியின் கொடிய சூழ்ச்சியும் தன்னுடைய நேர்மையின் மீது அவளுக்கிருந்த அவநம்பிக்கையும் நன்றாக விளங்குகின்றன. கைகேயியினிடம் நேரிடையாகவே தன்னுடைய நிலையைத் தெரிவிக்கும் ஸ்ரீராமன், "நாஹமர்த தபரோதேவி! லோக மாவத்ஸ-முத்ஸஹே! வித்திமாம ருஷிபிஸ் துல்யம் கேவலம் தர்மமாஸ்திதம்!!"

'அம்மா! நான் எள்ளளவும் பொருளாசை உடையவனன்று; உலகில் (சுகத்தை அனுபவித்துக் கொண்டு) வாழ்வதற்கு ஆசைப்படவில்லை. என்னை தர்மத்தில் நிலையாக இருக்கும் ருஷிகளுக்குச் சமானமாக அறிவீராக' என்கிறார். மேலும், 'என்னிடம் குணம் சிறிதும் இருப்பதாகத் தாங்கள் இன்னும் அறியவில்லை: இந்த உத்திரவைத் தாங்களே இடுவதற்கு உரிமை இருந்தும், அரசர் உத்திரவிடுவதாகக் கூறினீரே.'' என்கிறார்.

சுகி

இந்த சம்பாஷணைக்குப் பிறகு கைகேயியை ஸ்ரீராமன் தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் தீங்கிழைப்பவளாகவே கருதுகிறார். ஆகவே கௌஸல்யையைச் சந்தித்து, பட்டாபிஷேகம் தடைபட்டு விட்டதாகவும், தான் வனம் செல்ல உத்திரம் இடப்பட்டுள்ளதாகவும் கூறும்போது, இந்த ஏற்பாடு கௌஸல்யை, சீதை, லக்ஷ்மணன் ஆகியவர்களின் துக்கத்திற்காகவே திட்டமிட்டுச் செய்யப்பட்ட செயலாகும் என்று கூறுகிறார். தாய்க்கும் தனயனுக்கும் ஏற்படும் தர்க்கத்தின் முடிவில் கௌஸல்யை தன்னையும் வனத்திற்கு அழைததுச் செல்லும்படி வேண்டுகிறாள். அப்போது கௌஸல்யை தசரதனுடன் அயோத்தியிலேயே தங்கி அவரைக் காப்பாற்ற வேண்டியது அவளுடைய கடமையாகும் என்று இராமன் கூறுகிறார். அந்த சந்தர்ப்பத்தில், அரசன் கைகேயியினால் வஞ்சிக்கப்பட்டாரெனறும், இராமனும் வனம் சென்று கௌஸல்யையும் அவரை உபேக்ஷித்துவிட்டால், அவர் நிச்சயம் ஜீவித்திருக்க மாட்டாரென்றும் கூறி கௌஸல்யை அயோத்தியிலேயே தங்குவதற்குச் சம்மதிக்கும்படி செய்கிறார்.

இவ்வாறு கைகேயியின் துரோக சிந்தனைகளை நன்றாக அறிந்துகொண்டு வனம் செல்லும் ஸ்ரீராமனின் மனக் கண்களுக்குமுன், வனத்தில் கைகேயியின் சூழ்ச்சிகள் மேலும் விசுவரூபம் எடுக்கின்றன. ஒரு தினம் இரவு நேரத்தில் லக்ஷ்மணனுடன் தன்னுடைய எண்ணங்களை ஒளிவு மறைவின்றி வ்யக்தமாகக் கூறும்போது, "நானும் வனத்திற்கு அனுப்பப்பட்டு, பரதனும் இளவரசானுகி விட்டால், அவனுடைய அரசை ஸ்திரப் படுத்துவதற்காக அரசனுடைய பிராணனையும் கைகேயி போக்குவிக்கக் கூடும்' என்றும், "கைகேயி" (என் மேல் உள்ள துவேஷத்தினால்) என் காரணமாக, ஸுமித்ரையையும், கௌஸல்யையையும் பீடிக்காதிருப்பாளா! என்ன(பீடிக்கவே செய்வாள்.)

" க்ஷுத்ரகர்மாஹி கைகேயீத்வேஷ
மந்யாய்ய மாசரேத் |
பரிதத்யாஹி தர்மக்ஞே கரமதே மம
மாதரம் ‖

'கைகேயி அல்பமான கார்யங்களைச் செய்யக்கூடியவளல்லவா ஆகையால் நம் தாய்மார்களுக்கு அவள் விஷத்தைக் கொடுக்கவும் செய்வாள்." (அயோ-53-18) என்றும் இராமன் கூறுகிறார்.

கைகேயியைப் பற்றி இத்தகைய அபிப்பிராயம் ஸ்ரீராமனுக்கு இருந்த போதிலும் பரதனிடம் பாதுகைகளை அளித்து அனுப்பும் போது, "தாயாரான கைகேயியை சரிவர ரக்ஷிப்பாயாக - அவள்மீது கோபிக்கக் கூடாது. என் ஆணை, சீதை ஆணை" என்று உத்திரவிட்டு அனுப்புகிறார்.

இதன் பின்னர், வனத்தில் விராதன் சீதையைத் தூக்கிக் கொண்டு ஓடும்போது,ஸ்ரீராமனின் சாதாராணமான மனிதத்தன்மை வெளிப்படுத்தப்படுகிறது. விராதனுடன் போரிட்டுச் சீதையை மீட்க வேண்டிய சமயததில் அதைப்பற்றி யோசிப்பதன் முன்னர், தனக்கு இன்னல் விளைவித்த கைகேயியை நிந்திப்பதையே முக்கியமாகக் கருதுகிறார். லக்ஷ்மணனைப் பார்த்து.

"யதபிப்ரேய மஸமாஸு, ப்ரியம் வர
வ்ருதம் சயத் |
கைகேயாஸ்து ஸுஸம்பன்னம் க்ஷிப்ர
மத்யைவலக்ஷ்மண
யாநதுஷ்யதி ராஜ்யேந புத்ரஸ்த்தே
தீர்க்க தர்சினீ |
யயாSஹம்ஸர்வபூதானாம் ஹித:
பரஸ்தாபிதோ வநம் |
அத்யே தாநீம் ஸகாமாஸாயா மாதா
மம மத்யம ‖
(ஆர-2-18 to 20)

'லக்ஷ்மண! கைகேயிக்கு என் விஷயத்தில் எந்த அபிப்பிராயமுண்டோ, எந்தக் கோரிக்கை வரங்கொடுத்ததால் கேட்கப்பட்டதோ அது சீக்கிரத்தில் இப்போதே நன்றாகப் பலித்து விட்டது. (நாம் மூவரும் இப்படி கஷ்டப்பட வேண்டுமென்ற) தீர்க்காலோசனை உள்ள கைகேயி (பிள்ளைக்காக ராஜ்யம் கொடுக்கப் பட்டதில் மாத்திரம்) திருப்தியடையவில்லையோ, எல்லாப் பிராணிகளுக்கும் நன்மையைச் செய்யும் நான் வனத்திற்கு அனுப்பப்பட்டேனே, எவள் எனது நடுத்தாயோ இன்றைய தினம் இந்த க்ஷணந்தான் எண்ணம் நிறைவேறியவளாவாள்" என்னும் சொற்கள் ஸ்ரீ ராமன், கைகேயி தன்னை வனத்திற்கனுப்பியதன் நோக்கம்,சீதையைப் பறிகொடுப்பதறகாகவே திட்டமிட்ட செயலாகும் என்று தன்னுடைய துக்கத்தின் எல்லையில், நிந்தனையாகக் கூறுவதை விளக்குகின்றன.

தண்டகாவனத்தில் மாரீசனுகிய மாயமானைத் துரத்திச் சென்று அவனை வதம் செய்துவிட்டு ஸ்ரீராமன் கலக்கத்துடன் பர்ண சாலையை நோக்கி வரும்போது லக்ஷ்மணன் தனியாக எதிர்படுகிறான். சீதை இல்லாமல் வரும் லக்ஷ்மணனைப் பார்க்கும் இராமன் தான் சந்தேகித்தபடி சீதையை யாராவது ராக்ஷஸர்கள் கடத்திச் சென்று வதம் செய்திருப்பார்கள் என்று நினைக்கிறான். சீதையைப் பிரிந்த தான் உயிர் வாழ முடியாதென்றும், இராமன் இறந்ததும் லக்ஷ்மணன் தனியாக அயோத்திக்குத் திரும்புவானென்றும் கற்பனை செய்து கொண்டு, இவ்விதமான துக்கங்கள் யாவுக்கும் கைகேயி தன்னை வனத்திற்கு அனுப்பிய கொடிய செயலே அடிப்படைக் காரணம் என்று தீர்மானிக்கிறார். ஆகையால், கைகேயியை நிந்தித்துக்கூறும் போது, "இராமன் இறந்து, தனியே செல்லும் லக்ஷ்மணனைக் காணும் கைகேயி சந்தோஷிப்பாள் என்றும், மகனும் இறந்து கைகேயியின் தயவை நாடி நிற்கும் கௌஸல்யையின் நிலை

மிகவும் பரிதாபமாக இருக்கும்'' என்றும் கூறி தன்னுடைய மனத் தாங்கலை வெளியிடுகிறாள்.

சீதையும் இராமனைப் போலவே சந்தர்ப்பம் ஏற்பட்ட போதெல்லாம் தன்னுடைய துன்பங்கள் ஒவ்வொன்றிற்கும் கைகேயியே காரணம் என்பதை நினைத்துக் கைகேயியை யும், சில சமயத்தில் கைகேயிக்கு முதலில் துர்ப்போதனை செய்த மந்தரையையும் நிந்திக்கிறாள்.

இராவணன் சீதையைத் தூக்கித் தேரில் வைத்துக் கொண்டு பஞ்சவடி யிலிருந்து ஆகாய மார்க்கமாகச் செல் லும்போது சீதை,

ஹந்தே தாநீம்ஸகாமாஸ்து கைகேயீ ஸஹபாந்தவை: |
ஹ்ரீயே யத்தர்மகாமஸ்ய தர்மபத்நீ யசஸ்விந. ||

'தர்மத்தில் பற்றுள்ளவரான ஸ்ரீ ராமனின் தர்ம பத்நீயாகிய நான இவ்வாறு கடத்திச் செல்லப்படுகிற படியால் இப்போது கைகேயியும் அவளுடைய பந்துக்களும் (அவர்களுடைய) எண்ணம் நிறைவேறியவர்களாக இருப்பார்களாக'' என்று கூறுவதன் (ஆர-49-29) மூலம் இராவணன் தன்னைக் கடத்திச் செல்வது கைகேயிக்குச் சந்தோஷத்தை உண்டு பண்ணக் கூடியதாக இருக்கும் என்று தன் துக்கத்தின மததியில் பழிச் சொல்லில் முனைவது விளங்குகிறது.

யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்னதாகச சீதையினிடம் இராவணன் வந்து இராமன் யுத்தத்தில் இறந்து விட்டதாகக கூறி மாயையினால் நிர்மாணம் செய்யப்பட்ட (துண்டிக்கப் பட்ட) இராமன் தலையைக காண்பிக்கிறான். அநத சிரஸில் சீதை அனுமனிடம கொடுத்தனுப்பிய சூடாமணியும் காணப்படுகிறது. இராமன் உண்மையிலேயே இறந்துவிட்டதாக நம்பும் சீதை, முதலாவதாகப் பல வாக்கியங்கள் மூலம் கைகேயி எண்ணம் நிறைவேறிவிட்டவளாக இருப்பாள் என்று பழித்துக் கூறிவிட்டு அந்த ஆயாஸத்தில் மூர்ச்சை அடைகிறாள். அதன் பிறகு மூர்ச்சை தெளிந்ததும் இராமனின் பிரிவைக குறித்து வருந்துகிறாள்.

வனம் சென்ற பிறகு, சித்ரகூடத் தில் தங்கி இருககும் காலத்தில், இராமனைத் திருப்பி அழைத்து வந்து பட்டாபிஷேகம் செய்விப்பதற்காகப் பரதன் வரும் சந்தர்ப்பத்தில், கைகேயி தன்னுடைய யோசனையற்ற செயல்களின் விளைவை நன்றாக அறிந்து கொண்டு விட்டபடியால், கௌஸல்யையைவிட அதிகமான ஆவலுடன் புறப்படுகிறாள். பரதனும் இராமனைப் பிரார்த்திக்கும்போது, 'ஸாநத்விதா மாமிகாமாதா', என்று கூறிக் கைகேயியின் நல்லெண்ணத தையும் எடுத்துரைத்தும் ஸ்ரீராமன் தன்னுடைய பிரதிக்ஞைப்படி பதினான்கு வருஷங்கள் கழிந்த பிறகே அயோத்திக்குத் திரும்ப முடியும் என்றுகூறி அனைவரையும் அனுப்பி விடுகிறார்.

ஆகவே, இந்த சந்தர்ப்பத்திற்குப் பிறகு ஸ்ரீராமனாவது சீதையாவது கைகேயியைப் பழிப்பது அர்த்தமும் நியாயமுமற்ற செயலாகும். ஒரு வேளை துக்கம் காரணமாக, ஆரம்பத் தில் கைகேயியின் சூழ்ச்சியினாலன்றோ வனம் செல்ல ஏற்பட்டதென்று கூறினாலும் ஒரு அளவு அதை ஏற்றுக் கொள்ளலாம். அவர்களுக்கு ஏற்பட்டுள்ள இன்னல்களை கைகேயி அறிவாளானால், சந்தோஷம் அடைவாளென்றும், எணணம் நிறைந்த வளாவாள் என்றும் கூறுவது முற்றும் பொருத்தமற்றதல்லவா. ஆனால், உலகில் மனிதர்களின் இயல்பு அநேகமாக இவ்வாறுதான் உள்ளதென் பதை வால்மீகி இத்தகைய வாக்கியங்கள்மூலம் ஆணித்தரமாக விளக்கி இருக்கிறார்.

கௌஸல்யையின் பழிச்சொற்கள் இன்னும் அதிகமான தீவிரத்தைக் காட்டுகின்றன. பரதன் அயோத்திக்கு வந்ததும் அவ்விடத்தில் ஏற்பட்டிருந்த அவல நிலையாவற்றுக்கும் தன் தாய்தான் மூலகாரணம் என்பதை அறிகிறான். அவ்விதமான துரோகச் செயல்களுக்காகக் கைகேயியை நிந்திப்பதுடன் நிற்காமல் அந்த செயல்களுக்கும் தனக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை என்பதைப் பறைசாற்ற முயல்கிறான். அங்குள்ள வர்களிடம் தன்னுடைய நிலையைக் குறித்துக் கூறிவிட்டுக் கௌஸல் யைக்கு ஆறுதல் சொல்வதற்காக அவளுடைய அரண்மனைக்கு விரைகிறான். பரதனின் குரலைக் கேட்ட கௌஸல்யை அவன் வந்துவிட்டதை அறிந்து, தானே அவனிடம் சென்று நேரில் முறையிடுவதற்காகப் பரதனை நோக்கி விரைவாக வருகிறாள். இருவரும் சந்திக்கும்போது பரதனுடைய உண்மையான நிலையை அறிந்து கொள்ளாமல், கௌஸல்யை, பரதனுடைய தாயார் அவனுக்காகத் திட்டமிட்டுச் செய்த செயல்களினால் கிடைத்த ராஜ்யத்தை ஏகபோகமாக அனுபவிக்கும்படிக்கும், தன்னை இராமனிருககும் வனத்திற்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிடும்படிக்கும் பல விதமான கொடூரமான பழிச்சொற்களைக்கூறுகிறாள் இவ்வார்த்தைகளால் புண்ணில் ஊசியை நாட்டிய மாதிரி பரதன் துடிககிறான். அவன் பயந்த படியே (அவன்) பழிக்கப்பட்டதைக் கேட்டதும் மிகவும் பரிதாபமாக ஓல மிட்டுக் கொண்டு பல சபதமொழிகளைக் கூறுகிறான். கௌஸல்யை நினைத்தபடிக்கு இராமன் வனம் சென்றதற்குப் பரதன காரண கர்த்தாவாக இருப்பானென்று ஏற்பட்டால் அவ்வளவு பாபங்களின் பலன் களும் தனக்குக் கிடைக்கட்டும் என்கிறான். பரதனுடைய உண்மையான நிலையை அறியும் கௌஸல்யைக்கு மிகவும் பிரயத்தனப்பட்டுப் பரதனை ஆச்ஸ்வாஸப்படுத்த வேணடிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது.

இவ்விதமாக நிந்தனையைப் பற்றிய மனித இயல்புகள் யாவற்றையும் வால்மீகி மிகவும் அழகாகச் சித்தரித் துள்ளது விளங்குகிறது. ○

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

''பாகவத புராணம்'' இதன் பெருமை என்ன?

பகவானாகிய கிருஷ்ணனது பெயராலேயே இது அழைக்கப்பட்டு ஒரு தனிப்பெருமை பெற்றது. வட நாட்டில் இதற்கு அதிகமான புகழ் உண்டு. சாப வசத்தால் மதிகலங்கி இருந்த பரீக்ஷித்துக்கு சுகப் பிரம்ம மஹரிஷியால் ஏழுநாள் கூறப்பட்ட பெருமை பெற்ற நூல். இதில் 12 ஸ்கந்தங்கள் உள்ளன. வியாசரே இந்தப் புராணத்தின் பெருமையைக் கூறும் பொழுது தொடக்கத்திலேயே, இந்தப் புராணம் வேதமாகிய கல்பவிருக்ஷத்தின், கிளி கொத்திய(சுகப் பிரம்மம் அனுபவித்த) கனி. இதனை எல்லோரும் புஜித்து, பஜித்து எல்லா தன்மைகளையும் பெறுங்கள என்றார். பிர்ம்மநிஷ்டரான சுகப்பிரம்மம் இப் புராணததில் வரும கிருஷ்ண லீலைகளை அனுபவித்த ஸகுண உபாஸகரின் நிலையையும் அடைந்தாராம்' கண்ணனாகிய காந்தம் என் உள்ளத்தை இழுக்கிறது, உருக்குகிறது என ஆனந்தக் கண்ணீர் விட்டனராம். இதில் ரிஷி பரம்பரை — வியாஸருடைய சரித்திரம் — பாணடவர்களின் பரம்பரை — பரீக்ஷித்தின கதை - விதுரர் — மைத்ரேயர் பற்றிய கதைகள் - உலகப் படைப்பு - கபில வாஸுதேவர்களின் வேதாந்த உரையாடல் - துருவன், பிருது, பிராசீன பர்ஹிஸ் - பிரிய வரதன் - பிர்மாண்டம் - 14 உலகங்களின நிலையும், வருணனையும் - அஜாமிளன், விருத்ரன், கஜேந்திர மோக்ஷம், சமுத்ரம் கடைதல் - சூரிய வம்சம், சந்திர வங்சம் முதலியன 9 ஸ்கந்தம் வரை அருமையாக வருணிக்கப்பட்டுள்ளது. 10 ஸ்கந்தமே பாகவத புராணத்தின் ஜீவநாடியாகும். கரும்பில நடுப் பகுதி போல இந்தப் பாகவதக் கரும்பில் தசம ஸ்கந்தம் மிகவும் சிறப்புடையது. இதில் முழுக்க முழுக்க பகவான் கிருஷ்ணனைப் பற்றிய வருணனைகளே உள்ளன. இது இரணடு பகுதிகள கொண்டது கணண பிரானின அவதாரம் முதல் பால்யம், யௌவனம், பிருந்தாவனம், வடமதுரை, துவாரகை பற்றிய வருணனை மற்றும் யது சரித்திரம், தத்தாத்ரேய சரித்திரம், கடைசியில் கண்ணனது சாபத்தால் யது வமிசத்தின் அழிவு வரை அருமையாகக் கூறப் பட்டுள்ளன. இதை அடிப்படையாகக் கொணடு மலையாளம் நாராயண பட்டாத்ரி நாராயணீயம் என்ற மிகவும் வரப்பிரசாதம் உள்ள ஸ்ரீ குருவாயூரப்பன் விஷயமாக அவனருளால் எழுதி கடும் நோயிலிருந்து நீக்கம் பெற்றார். பத்தாவது ஸ்கந்தத்துக்குப் பின் உலகத்தின் எதிர்காலம், கலியுகத்தின் கொடுமை, பரீக்ஷித்தின் மோக்ஷம், மார்க்கண்டேயரின் தவம் முதலியன நன்கு விளக்கப்பட்டன.

நாரதிய புராணம் விளககம் என்ன?

இதிலும் பூர்வ பாகம், உத்தர பாகம் என இரு பிரிவுகள் உணடு. பிரகச்சித்திர கதை என்ற நூலுக்குள் வரும கதைகளுக்கு இது ஆதாரமான புராணம். முன் பகுதியில் 4 பாதங்கள் பிற்பகுதியில் 1 பாகம் ஆக 5 பாகங்கள் அடங்கியுள்ளன. சூதர் சௌநக பகவான் இருவாகளின் உரையாடலாக அமைந்தது. இதில் மோக்ஷ தர்மம் - மோக்ஷோபாயம் - வேதம்-அதன் அங்கங்கள - சுகப் பிரமத்தின் அவதாரம் - மந்திரம் - தந்திரம - பதி, பசு, பாசம் இவைகளின் வருணனை - புராண லக்ஷணம் - மாதங்கள் - திதிகள் - இவைகளின பெருமை - ஏகாதசி மாகாத்மியம் - கங்கை, காசி இவைகளைப் பற்றிய கதை-புருஷோத்தம வருணனை - யாத்திரையின் பெருமை - பிரயாகை ஹரித்வாரம், பத்ரி, ப்ரபாஸ க்ஷேத்திரம இவைகளின் பெருமை விளக்கம் - வேத பாதஸ்தவம் - கோகர்ணம, லக்ஷ்மண் ஜூலா, அவந்தீ, வடமதுரை சேது, பிருநதாவனம் - முதலிய பதிகளின சிறப்பு, மோகினி சரிதம் இவைகளைப் பற்றி எல்லாம் கூறும். இதனைப் படிப்பவர்களுக்கு சுவர்க்க இன்பம நிச்சயம் என்றெல்லாம கூறப்பட்டுள்ளன.

மார்க்கண்டேய புராணம் பெருமை என்ன?

இந்தப் புராணம் படித்தால் மிகவும் புண்யம். அதாவது ''ஸுமகத்புண்யம்'' என இதில் கூறப்பட்டுள்ளது. இதில் 8 அந்தரங்கங்கள் உள்ளன. இது சக்திஉபாஸகர்களுககு மிகவும் பயன்படும் புராணம். தேவியைப் பற்றிய ''சப்த சதீ'' பெருமை பெற்றது. மார்க்கண்டேய மகரிஷி ஜைமினிக்குக் கூறுவதாக அமைந்தது. பறவைகளின் தோற்றம், முறபிறப்பு, பாஷை இவைகளைப் பற்றிக் கூறும். ஹரிச்சந்திரன் ஹைஹையன், மதாலஸா, அலர்க்கன் இவர்களின் சரித்திரம், கற்பங்கள். பிரளயம் ஏற்படப் போவது பற்றியும் கூறப்பட்டுள்ளன. தீவுகள், வர்ஷங்கள் (தேசக்கண்டங்கள்) மனுக்கள் - இவர்களைப் பற்றிய வரலாற்றுடன் ஸ்ரீதுர்க்காதேவியைப்பற்றிய விஸ்தாரமான தத்துவங்கள் - பிரணவத்தின் உற்பத்தி, பெருமை, மார்க்கண்டேயர் பிறப்பு - நரிஷ்யந்தன் சரித்திரம் - இக்ஷ்வாகு சரிதம் - குசாம்சன், புரூரவன் நகுஷன், யயாதி இவர்களைப் பற்றிய வாழ்க்கை விபரம் - துவாரகை பற்றிய சிறப்பான வருணனைகள் என்பனயாவும் இப்புராணத்தில் உள்ளன.

(தொடரும்)

# ○ ○ நரகம் சேர்வதரிது ○ ○

நரகத்திற்கு யாருமே போக ஆசைப்பட மாட்டார்கள். ஆனல், நரகத்திற்குப் போகுமாறுதான் பல ரும காரியங்கள் செய்வர். அதாவது பாவச் செயல்கள் எளிது. எனவே தாமாக நரகத்திற்குப் போகிற வழி யில்தான் எல்லோரும் செய்து கொண்டிருப்பார்கள்.

இப்படி எண்ணுவோம் நாம். ஆனல் ஓர் ஆழ்வார் நரகத்திற்குப் போவது மிகக் கடினம் என்பார். அவர் பூதத்தாழ்வார் ஆவார். இரண்டாம் திருவந்தாதியில் 21ம் பாடலாக வருவது:

தாம் உளரே தம் உள்ளம் உள்
உளதே, தாமரையின்
பூ வுளதே ஏத்தும் பொழு
துண்டே—வாமன்
திரு மருவுதாள் சென்னியரே,
செவ்வே
அரு நரகம் சேர்வ தரிது.

நரகத்திற்குப் போவது மிகச் சிரம மான காரியம். ஏனென்றல், நமக்கு இயற்கையிலேயே நரகம் செல்லாமல் இருப்பதற்கான சூழ்நிலை அமைந் துள்ளது. இங்கு பூதத்தார் படிப்படி யாக இது உள்ளது அது உள்ளது என்று வரிசையாக உள்ளதை யெல் லாம் அடுக்குகிறர். நாமோ இருக் கிறேம். நம் உடலினுள உள்ளம் என்று ஒன்று இருக்கிறது. அர்ச்சனே செய்யத் தாமரை மலர் உள்ளது. போதிய அவகாசமும் உள்ளது. இன்னும் என்ன வேண்டும்?

எம்பெருமானை நினைத்து வழிபடு தற்கு மனம் வேண்டும். அதுதான் இருக்கிறதே—நம் உள்ளம் உள் உளதே.

திருமாலின் திருத்தாளைத் தலை வணங்கி வழிபடுவோர் எப்படி நரகத்திற்குப் போக முடியும்? ஆகவே அருநரகம் சேர்வது அரிது என்று அவர் முடிப்பார். ஆம், சுவர்க்கம் செல்வதுதான் உண்மையில் எளிது என்று நம்மை ஆழ்வார் வெகு சுலப மாக நம்ப வைக்கிறர். நாம சாதா ரணமாக எண்ணி வருகிறேமே. நர கத்திற்குச் செல்வது எளிது என்று, அந்தக் கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டும்.

பின்னல் கொடிய நரகத்தில் போய் மாட்டிக் கொள்ளாமல் இரு க்க வேண்டுமானல், முன்னலேயே அதற்கான முயற்சிகள் செய்ய வேணடும். கடைசியில் மனம கலங்கி என்ன பயன்? எனவே முன்னலேயே, போன பாடலில் சொன்னவண்ணம் 'பொழுது உண்டே' என்ற எண்ணத் தோடு, ஈசனின் சேவடியை வழிபடல் வேண்டும். 91ம் பாடல் இது.

பின்னல் அருநரகம் சேராமல்
பேதுறுவீர்
முன்னல் வணங்க முயல்மினே
—பன்னூல்
அளந்தானைக் கார்கடல் சூழ்
ஞாலத்தை, எல்லாம்
அளந்தான் அவன் சேவடி.

கடல் சூழ்ந்த இவ்வுலகினை அன்று வாமன அவதாரத்தில் அளந்த திரு அடியை வழிபட, முயற்சி செய்ய வேண்டும். பல வேத, சாஸ்திர, புராணநூல்கள் போற்றிப் புகழும் எம்பெருமானை வணங்கி வழககப் படுத்திக்கொள்ள வேணடும் இல்லை யேல், பின்னல் அருநரகம் போகா மல் தப்பவழி ஏது என மனம் கலங்க வேண்டி வரும்.

பூதத்தார் நரகத்தை இன்னும் ஓரிரு இடங்களிலும் பேசுவார், இரண்டு பாடல்கள் தாண்டினல், வருவது.

கடுது கொநு நரகம பிற்காலும
செய்கை
கொடி தென்றது கூடா மூன்னம்—
வடிசங்கம்
கொண்டானைக் கூந்தல்வாய்
கீண்டானை கொங்கை நஞ்
சுண்டானை ஏத்துமினே உற்று

93ம் பாடல் இது. நரகம் உண்மை யில் கொடியது. அந்த வாதனை வேண்டவே வேண்டாம். கொடுமை மிகுந்த நரகம் என நம்மைக் கொஞ் சம் பயமுறுத்தவும் செய்கிறர் இங்கு ஆழ்வார்.

நம்முடைய பாவச் செயல்கள் யா வும் நமமைக் கொண்டு போய் அங்கே தள்ளிவிடும் கடைசிக் காலத்தில். அவ்வாறு ஆவதற்கு முன்னம் இங்கும் முன் ஜாக்கிரதையாக இருக்குமாறு எச்சரிக்கை! முனனல் வணங்க முயல்மினே என்று முன்பு சொன்ன வர், இந்த நரகம் கூடா முன்னர் ஏத்துமினே உற்று என்பார்.

திரு. ஏ. வேங்கடரத்தினம்
நெய்வேலி.

திருக்கரத்திலே கூரிய சங்காயுதத் தை ஏந்திய பெருமான் கேசி எனும் அரக்கனின் வாயைக் கிழித்துப் போட்ட திருமால் கிருஷ்ணவதாரத் திலே குழந்தையாகவே ஓர் அரக்கி யின் மார்பிலே பால் பருகுகிறேன் என்று கூறி, நஞ்சு அருந்திய நாராய ணனைப் போற்றிப் பணிதல்வேணடும். அவரே நமது உற்ற துணை. அவரைப் பற்றிக் கொண்டால், நரகம் சேர்வது அரிது ஆகும்.

முதல் ஆழ்வாருள் முதல் ஆழ்வார் ஆகிய பொய்கையாரும் நமக்கு நல் உறுதிமொழி தந்து, நம்பிக்கை ஊட்டி, நரகம் நமக்கில்லை என்ற

நல்ல வார்த்தை சொல்லுவார். முதல் திருவந்தாதியில் 65ம் பாடல் இது:

வினையால் அடாப்படார் வெந்நரகில் சேரா
தினையேனும் தீக்கதிக்கட் செல்லா—நினைதற
கரியானைச் சேயானை ஆயிரம்போ செங்கட்
கரியானைக் கைதொழுதக் கால்.

பாவத்தினால் தவிக்க மாட்டார்கள். கொடிய நரகில் தள்ளப்பட மாட்டார்கள். கொஞ்சம்கூடத் தீய கதியிலே சிக்கிக் கொள்ளமாட்டார்கள். இவ்வாறு, சொன்னதையே திரும்பத் திரும்ப மூன்று வகையாகச் சொல்கிறது பாசுரம். பாவத்தினால் வினையும் பரிதவிப்பு, நரக வாதனை, தீயவழியில் திண்டாடிச்சாவது ஏதும் இல்லை. ஆனால், ஒரே ஒரு நிபந்தனை! எம்பெருமானைக் கையெடுத்துக் கும்பிட வேண்டும். ஆயிரம் திருப்பெயர்கள் படைத்த செந்தாமரைக் கண்ணன், பார்ப்பதற்கு நீல வண்ணராகத் தோன்றும் ஒளி மய மூர்த்தி. நினைத்துப் பார்க்கவே அரிய பரம புருஷன். அத்தகைய ஈசனைக் கைதொழுக்கால் தீக்கதிக் கண் செல்லார்.

மூன்றும் ஆழ்வார் பேயாழ்வார் எனப்படுவார், முதல் மூவருள். அவரது அருளிச் செயல் மூன்றாம் திரு அந்தாதியாகும். அதில் 47ம் பாடல ஆழ்வார் ஐயனையே நோக்கிப் பாடுவார்.

நின்ற பெருமானே நீர் ஏற்று உலகெல்லாம்
சென்ற பெருமானே செங்கணனே —அன்று
துரகவாய் கீண்ட துழாய் முடியாய் நங்கள்
நரக வாய கீண்டாயும் நீ.

பகவானை நீயென்று அழைத்து வெகு சுவாதீனமாகப் பேயார் பேசுவார். நின்ற பெருமானே, சென்ற பெருமானே என்ற இரு விளி வாசகங்களும் ஈசுவரனின் சாசுவதத் தன்மையையும் வியாபக நிலையையும் சுட்டும் செட்டான சொற்கள். நிலைத்து நிற்கும் பெருமான். திருவேங்கடம், திருவிண்ணகரம், திரு அட்டபுயகரம், திரு அத்தியூர், திரு அல்லிக்கேணி, திரு அழுந்தூர், திரு இடவெந்தை, திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம் போன்ற பல திவ்விய தேசங்களில் நின்ற திருக்கோலத்தில காட்சி தரும பரமனை ஆழ்வார் நின்ற பெருமானே என்று அழைத்தார் போலும்!

மகாபலி மாமன்னன் தாரை வார்த்துத் தத்தம் செய்து கொடுத்த இவரது உலகை இவர் மீட்டு எடுத்துக் கொண்ட வரலாறு அடுத்துப் பேசியாகிறது. உலகெல்லாம் இவர்க்குச் செல்வாக்கு உண்டு. நீக்கமற நிறைந்து விளங்கும் விஷ்ணு, எங்கும் வியாபித்துள்ள எங்கள் பிரபு. செவ்வரி இழைந்தோடும் அழகிய திருக்கண்கள் கொண்டவர். குதிரை முக அரக்கனின் வாய் கிழியச் செய்த சம்பவம் நினைவில் எழுகிறது. துளசி தளம் தரித்துள்ள எம்பெருமான் நம்மையெல்லாம் மாட்டிக்கொள்ளச் செய்வதற்காக வாய் பிளந்துக் கொண்டு ஆவலோடு இருக்கும் நரகத்தின் வாயிலையும் கிழித்துப் போட்டு விட மாட்டாரா, என்ன?

நங்கள் நரக வாய் கீண்டாயும் நீ!

நிறைவாக, இன்னொரு பாடலையும் பார்க்கலாம். மூன்றும திரு அந்தாதியில் மூன்றும் பாடல் ஆம, திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன் எனும் எடுப்புப் பாடலுக்கு அடுத்ததற்கு அடுத்தது.

மனத்துள்ளான் மாகடலநீர் உள்ளான் மலராள்
தனத்துள்ளான் தண துழாய் மார்பன்—சினத்துச்
செருநர் உகச் செற்றுகந்த தேங்கோத வண்ணன
வரு நரகம் தீர்க்கும மருந்து.

அடியார் உள்ளத்தே கோயில் கொண்டுள்ள எம்பெருமான் பாற்கடலிலும் பத்மாவதி தேவியின் மார்பிலும் துளசி சூடித் திருக்காட்சி தருபவர். மகா கோபத்தோடு மோதிய எதிரிகளை யெல்லாம் இருந்த இடம் தெரியாதவாறு மாய்த்த கடல் வண்ணத்தெந்தை, நம்மை நரகின் பிடியிலிருந்து தப்பவைக்க வல்ல ஒரே உபாயம் ஆவார்,

நரகம் என்ற நோயினின்று தப்புதற்கான மருந்து அவர்.

'நமஞ்சூழ் நரகத்து நமமை நணுகாமல் காபபான்'

(3ம் திருவந்தாதி, 98ம் பாடல்).

இவ்வளவும் முதல் ஆழ்வார் பாசுரங்கள். நாம முன்னமேயே விழிப்புடன் இருந்து விட்டால், இலேசில் அந்த நரகத்தின் பக்கமெல்லாம் ஒரு நாளும் போக மாட்டோம். ஈசனை வழிபட மனம், பொழுது, கை, சிரம் எல்லாம் உள்ளபோது, அரு நரகம் சேர்வதரிதே!

★

படிப்பு, வல்லமை, பொறுமை, பொறுப்பு, உழைப்பு ஏதும் இல்லாவிடினும் பொது மக்களின் தயவால் மட்டும் ஒருவன் சட்டசபைக்கு அனுபபப்படுவதைப் போல் ஞானம், பக்தி, வைராக்யம் தர்மம் ஏதும் இல்லாவிடினும் ஸாதுக்களின் கிருபையால் மட்டிலும் பகவானின ஸபைக்குச் சென்று விடலாம்.

— ஸ்ரீ ஸ்ரீ க்ருஷ்ணப்ரேமி சுவாமிகள்.
— தகவல்: ஆர். சுப்பாராவ்.

# நவராத்திரி வழிபாடு

ராத்திரி என்ற பெயருடன் இலங்குபவை நவராத்திரியும் சிவராத்திரியும் ஆகும். சிவராத்திரி சிவனையும், நவராத்திரி சக்தியையும் குறிப்பனவாகும். ஒன்பது இரவுகளும் ஒன்பது தேவியின் ரூபமாகும். நவாக்ஷரி என்ற ஒன்பது அக்ஷரங்கள் கொண்டது. சண்டிகா தேவியின் மூலமந்த்ரம் ஆகும்.

பகலைவிட இரவுதான் ஜீவராசிகளுக்கு நிம்மதியும் ஓய்வும் தருவதாகும். இரவில் ஐம்புலன்களும் மனதில் ஒடுங்குகின்றன. மனம் ஆத்மாவில் ஒடுங்குகிறது. ஆத்மா நம் உடம்பில் அந்நேரத்தில் அதிகம் சிந்திக்கும் திறனைப் பெறுகிறது. எனவே இரவு நேரங்களில் செய்யப்படும் நவராத்திரி, சிவராத்திரி விரதங்கள் அதிக பலனைத் தருகின்றன.

ராமபிரான் நவராத்திரி விரதத்தை அனுஷ்டித்து சீதையையும், ராஜ்யத்தையும் மீண்டும் அடைந்தார். சிவபிரானும் நவராத்திரி விரதத்தை கடைபிடித்தே திரிபுர சம்ஹாரம் செய்தார். மஹாவிஷ்ணுவும் அவ்விதமே மதுகைடபர்களை கொன்று அழித்தார். இந்திரனும் நவராத்திரி நோன்பிருந்தே விருத்திராசுரனை அழித்தொழித்தார்.

நவராத்திரி முதல் மூன்றுநாள் துர்க்கைக்குரியது. அடுத்த மூன்று நாள் லக்ஷ்மிக்கும் கடைசி மூன்று நாள் சரஸ்வதிக்கும் உரியனவாகும்.

நவராத்திரி ஒன்பது தினங்களிலும் அம்பாள் ஒன்பது வகை திருக்கோலங்களுடன் ஆராதிக்கப்படுகிறாள். முதல் நாளில் மூன்று வயதுள்ள 'பாலை' ஆகவும், இரண்டாம் நாள் ஒன்பது வயதுள்ள ''குமாரி'' என்னும் 'நவாக்ஷரி' ஆகவும், மூன்றாம் நாள் பதினைந்து வயதுள்ள தருணி ஆக 'பஞ்சதசாக்ஷரி' ஆகவும், நான்காம் நாள் பதினாறு வயதுள்ள சுமங்கலியாக 'ஷோடசாக்ஷரி' ஆகவும், ஐந்தாம் நாள் சதாக்ஷி என்னும் 'மாத்ருகாவர்ண ரூபிணி' யாகவும், ஆறாம் நாள் சாகம்பரி எனப்படும் ஸ்ரீவித்யா ரூபிணியாகவும், ஏழாம்நாள் மஹாதுர்க்கை ஆகவும், எட்டாம் நாள் மஹாலக்ஷ்மி ஆகவும், ஒன்பதாம் நாள் சும்பன நிசும்பனைக் கொன்ற சரஸ்வதி தேவியாகவும், பத்தாம் நாள் சிவசக்தி ஐக்ய ரூபிணி ஆகவும் வழிபடுவது மரபு.

நவராத்திரியில் கன்னிகை பூஜை, சுமங்கலி பூஜை மிக முக்கியம். நவராத்திரி ஒன்பது நாட்களும் வீடு தேடி வரும் பெண்களுக்கு நீராடுவதற்காக பச்சிலை, பூலாங்கிழங்கு, கஸ்தூரி மஞ்சள், கோரோஜனம், காசுக்கட்டி எண்ணை மஞ்சள், குங்குமம், பன்னீர், சந்தனம், மருதோன்றி ஆகியவைகளை அளிக்கவேண்டும். அம்பிகையின் சன்னதியில்அரசிமாவு, கோதுமைமாவு, முத்து, அக்ஷதை, கடலை, பாசிப்பருப்பு, மலர், கற்பூரம், நாணயம் ஆகிய ஒன்பது பொருட்களை வைக்கவேண்டும். புள்ளிக்கோலம், கட்டக்கோலம், பூக்கோலம், படிக்கட்டுக்கோலம், அம்பாளின் நாமம் எழுதிய கோலங்கள், திட்டாணி கோலம், பத்மம், ஆயுதம் ஆகிய கோலங்களைப்போடவேண்டும். காலை, மாலை வேளைகளில் அம்பாளின் ப்ரீதிக்காக தோடி, கல்யாணி, காம்போதி, பைரவி, கந்துவராளி, நீலாம்பரி, பிலஹரி, புன்னாக வராளி, வசந்தா ஆகிய ஒன்பது ராகங்களில் அமைந்த அம்பாள் பரமான கீர்த்தனைகளைப் பாடவேண்டும். மல்லிகை, முல்லை, சம்பங்கி, ஜாதி, பாரிஜாதம், செம்பருத்தி, தாழம்பூ, ரோஜா, தாமரை ஆகிய மலர்களையும், வில்வம், துளசி, மரு, கதிர்ப்பச்சை, விபூதிபச்சை, சந்தன இலை, தும்பை இலை, பன்னீர் இலை, மருக்கொழுந்து மாலைகளையும் அம்பாளுக்குச் சமர்ப்பிக்க வேண்டும். வாழை, மா, பலா, நாரத்தை, கொய்யா, மாதுளை, பேரிச்சை, திராட்சை, நாவல் பழங்களை நிவேதனம் செய்யலாம். வெண்பொங்கல், புளியோதரை, சர்க்கரைப் பொங்கல், தயிர்அன்னம், தேங்காய் அன்னம், பாயசான்னம், எலுமிச்சை அன்னம், அக்காரவடிசில், சுத்தான்னம் ஆகியவைகளை நிவேதனம் செய்யலாம்.

நவராத்திரி முதல்நாள் பூஜையால் தரித்திர நாசமும், இரண்டாம் நாள் பூஜையால் தன, தான்ய வளமும், மூன்றாம் நாள் பூஜையால் பகை அழிவும், நான்காம்நாள் பூஜையால் கல்வி வளர்ச்சியும், ஐந்தாம நாள் பூஜையால் துன்பம் நீங்குதலும், ஆறாம் நாள் பூஜையால் செல்வ வளர்ச்சியும், ஏழாம் நாள் பூஜையால், க்ஷேம விருத்தியும், எட்டாம் நாள் பூஜையால் பயம் நீங்குதலும், ஒன்பதாம் நாள் பூஜையால் எல்லா நன்மையும் உண்டாதலும் ஏற்படும். இந்த ஒன்பதுநாள் பூஜையால் முறையே குமாரி, திருமூர்த்தி, கல்யாணி, ரோகிணி, காளிகா, சண்டிகா, சாம்பவி, துர்கா, சுபத்ரா ஆகிய தேவதைகள் திருப்தி அடைகின்றன. வங்காளத்தில் இப்


**திருமதி. என். ஜெயா, பி எஸ்சி,**
ஒரத்தநாடு


பண்டிகை பெருமளவில் கொண்டாடப்படுகிறது. மண்ணினால் செய்த காளியை பத்துநாட்கள் பூஜித்து பிறகு ஆற்றிலோ, கடலிலோ கொண்டுபோய் போட்டு விடுவார்கள். இதற்குக் கௌரி குளித்தல் என்று பெயர். உத்திரப் பிரதேசத்தில் 'ராமலீலா' என்ற பெயரில் நவராத்திரி கொண்டாடப்பட்டு விஜய தசமி அன்று ராவணனின் பெரிய உருவம்திருவீதி உலாவாகக்கொண்டு வரப்பட்டு பிறகு அப்பொம்மைவடி

## திருமலையில்
### தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |
| **எஸ். வி. விருந்தினர் விடுதி,** | |
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |
| **திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)** | |
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண்; 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பகக காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

வத்திற்குள் இருக்கும் பட்டாசு மத் தாப்புக்கள்கொளுத்தப்பட்டு அரக்க வடிவம் பெரு உற்சாகத்துடன் எரிக் கப்படும். குஜராத் மாநிலத்தில் விசயதசமி அன்று இளம் பெண்கள் எரியும் மெழுகுவர்த்தி கொண்ட பானைகளைத் தலையில் ஏந்தி நாட்டிய மாடியபடி அம்பாஜி என்றழைக்கப் படும் கிராம தேவதை கோவிலுக்குச் செல்வார்கள். மஹாராஷ்டிரத்தில் வன்னி மர இலைகளை கொண்டு அம் பாளைப் பூஜித்து பிறகு அந்த இலை பிரசாதத்தைப் பெரியோர்களிடம் கொடுத்து காலில் விழுந்து வணங்கு வார்கள். புதுக்கோட்டை, மைசூர் ஆகிய இடங்களில் மன்னராட்சி இருந்த பொழுது நவராத்திரி பெரு மளவில் கொண்டாடப்பட்டது. ராஜஸ்தானத்தில் வீரர்களின் திரு விழாவாக கொண்டாடப்படுகிறது. தமிழ்நாட்டில் கொலு பொம்மை களை வைத்து தேவாலயங்களிலும், இல்லங்களிலும் சிறந்த முறையில் நவராத்திரி கொண்டாடப்படுகிறது. இவ்விதம் நவராத்திரி விழா தேசிய ஒருமைப்பாட்டு சின்னமாக விளங்கு கிறது.

தாமக்னி வர்ணாம் தபஸா ஜ்வலந்தீம்
வைரோசனீம்கர்ம பலேஷுஜுஷ்டாம்
துர்க்காம தேவீம் சரணமஹம்
பிரபத்யே ஸுதரஸி தரஸே நம:
-துர்க்கா ஸூக்தம்

'செந்தீ வர்ணத்தினளும், தன் ஒளி யால் பகைவர்களை ஒழிப்பவளும், ஞானக்கண்ணால் காணப்படுகிறவ ளும், கர்மபலனைக் கூட்டி வைப்ப வளுமான துர்க்கா தேவியைச் சரண டைகிறேன். பிறவிக்கடலை எளிதில் கடத்துவிப்பவளே உனக்கு நமஸ் காரம்



# நவராத்திரி தத்துவம்

"யாதேவி ஸர்வபூதேஷு மாத்ரு
ரூபேண ஸம்ஸ்திதா
நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை நமஸ்
தஸ்மை நமோ நம:"

என்று தேவி பாகவதம் அன்னை பரமேஸ்வரியை ஸ்தோத்தரிக்கிறது.

இவளே ஆதிசக்தி. அருட்பெருஞ் சோதியாக, அன்னை சக்தியாக, அகிலமனைத்துக்கும் அருள் பாலிக்கும் அருட்தேவியாக நாம் இந்த ஆதி சக்தியை வணங்குகிறோம்.

சிவனுக்கு ஒரு ராத்திரி. சக்திக்கு ஒன்பது ராத்திரி என்பார்கள். நவராத்திரி ஒன்பது நாட்களும் இந்த அன்னை சக்தியை நாம் வழிபடுகிறோம்.

தாய்தான் முதல் தெய்வம். ஆதலின், "தாயெலாம் அனைய ஓர் தந்தையே" என்று அந்த பரமேஸ்வரனைப் போற்றுகின்றபோதும் முதலில் தாயைத்தான் வணங்குகிறோம். அன்பாய் அரவணைத்து, குற்றங்களைப் பொறுத்து, தவறுகளை மன்னித்து, ஆதரிப்பவள் அன்னையே. பூரணத் தூய்மை, பூரணமான பொறுமை, தன்னலமற்ற தன்மை, முழுமையான மன்னிக்கும் இயல்பு, பூரணமான அன்பின் வடிவினள் அன்னையே.

இந்த ஆதி சக்தியே முத்தொழில் புரியும் முத்தேவியாக, படைக்கும் பிரமனுடன் சேர்ந்து பிரம்ம சக்தியாகவும், காக்கும் தெய்வமான விஷ்ணுவுடன் சேர்ந்து விஷ்ணு சக்தியாகவும், அழித்தல் தொழில் புரியும் சிவனுடன் சேர்ந்து சிவ சக்தியாகவும் விளங்குபவள் என்று தேவி பாகவதம் கூறுகிறது.

அருள் பாலிக்கும் அன்னை ஆதி பராசக்தியாக (மலைமகளாக), அறிவின் நாயகியாக (கலைமகளாக) பொருள் தந்து அருளும் செல்வத் திருமகளாக (அலைமகளாக) முத்தேவியாக விளங்குகிறாள். ஆகவேதான் நவராத்திரி ஒன்பது நாட்களும் இந்த மூன்று தேவியரையும், மும்மூன்று நாட்களில் அருளாட்சி தழைக்கும் தவத்திரு நாட்களாகப் பாவித்து பூஜிக்கிறோம்.

ஐந்து விதமான பக்தி வழிபாட்டில், அன்பே உருவான தாயாக வழிபடுவதில் சுலபமாக இறைவனை நெருக்கத்துடன், உரிமையுடன் கொண்டாட முடியும். சிவனை துதிக்கின்ற ஓர் இடத்தில்,


திரு. ஜி. சுப்பிரமணியன்,
மதுரை.


ஆதிபீஷண கடுபாஷண யமகிங்கர
படலீ
க்ருததாடன பரிபீடன மரணாகம
ஸமயே
உமயாஸஹ, மமசேதஸி, யமசாஸன
நிவஸன்
சிவசங்கர, சிவசங்கர ஹர மே ஹர
துரிதம்.

என்று சக்தியின் பெருமை பேசப்படுகிறது.

இவளே திருமாலின் இதயத்தில் உறைபவளாக ஸ்ரீ ஸூக்தம் புகழ்கிறது.



हिरण्यवर्णां हरिणीं सुवर्णरजतस्रजाम् ।
चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो ममावह ॥

ஜாதவேதோ: ஓ அக்னி தேவனே! ஹிரண்ய வர்ணாம்: தங்கம் போன்ற நிறம் வாய்ந்தவனும், ஹரிணீம்-பாபத்தைப் போக்குபவனும், ஸுவர்ண ரஜதஸ்ரஜாம் - பொன், வெள்ளி இவைகளை ஹாரமாக தரித்தவனும், ஹிரண்மயீம்: தங்கத்தின் உருவாக, பொன் நிறமேனியளாய், லக்ஷ்மீம்: எல்லோரும் விரும்புகின்ற ஸ்ரீ தேவியை எனக்கு அளிப்பாயாக என்று வேண்டுகிறது.

அறிவின் நாயகியான அவளை பாரதியார்!

வெள்ளைத்தாமரைப் பூவில்இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
..............................
ஓதும வேதத்தின் உள்நின்றொளிர் வாள்
கள்ளமற்ற முனிவர்கள் கூறும் வாசகத்தின்
உட்பொருளாவாள்
என்று பாடி மகிழ்கிறார்.

மனிதனுக்குரிய மூன்று குணங்களாக தாமஸ, ராஜஸ, சத்துவ குணங்கள் கூறப்படுகின்றன. தாமஸ, ராஜஸ குணங்களை வென்று சத்துவ குணத்தை அடைவதே மனித வாழ்வின் பெரும் பயனாகும்.

மனிதனிடம் உள்ள உலகப்பற்று, மிருக குணங்களை அழிக்க அன்னை துர்க்கையை வணங்க வேண்டியுள்ளது. செல்வத்தை நல்வழியில் பெற்று, தூய்மையான வாழ்வு வாழ லட்சுமி துணைபுரிகிறாள். உலகத்தின் கிரியைகளுக்கு ரஜோ குணம் தேவைப்படுகிறது. ஆனால், இந்த ரஜோ குணம் தெய்வீகமான சத்துவ குணத்துடன் சேர வேண்டும் என்பதற்கே சரஸ்வதியை வழிபடுகிறோம்.

உலகத்தில் நல்வாழ்வு வாழ்ந்து யோகம், தியானம் என உயர் நிலையை அடையவும், சிறந்த நிலையைப் பெறவும் இந்த மூன்றிலும் படிப்படியாக உயர்ந்து சிறப்பெய்த நவராத்திரிதிருவிழாவில் நாம் நினைவு கூறுகிறோம்.

**துர்கா, லக்ஷ்மி, சரஸ்வதி:**

துர்க்கையாக முதல் மூன்று நாட்களும், லட்சுமியாக அடுத்த மூன்று நாட்களும், சரஸ்வதியாக கடைசி மூன்று நாட்களும் ஆக ஒன்பது நாட்களும் அருள்பாலிககின்ற அன்னை சக்தி ஒருவளே. பத்தாவது நாளன்று வெற்றியைத் தரும் விஜய தசமியாகக் கொண்டாடச் செய்கிறாள்.

ஒரு நல்ல குருவை நாடி, வாழ்க்கையை வெற்றிப் பாதையில் செலுத்த இந்த விஜயதசமி நாள்நல்ல நாளாகும். இந்நாளை தொழிலாளர்களும் தங்களுக்கு வெற்றியை, மகிழ்ச்சியைத் தேடித்தர ''ஆயுத பூஜை''யாகக் கொண்டாடுகிறார்கள்.

இப்படிச் சாதாரண வாழ்க்கையிலிருந்து உயர்ந்த வாழ்க்கைக்கு வழி காட்டும் பூஜையாக ஒன்பது நாட்களும் கொண்டாடப்படும் விழாவே நவராத்திரி.

உடலுக்கு தேக பலமும், ஆரோக்கியமும், பராக்கிரமும் வேண்டி அன்னை துர்க்கையை முதல் மூன்று நாட்களில் வழிபடுகிறோம். இவையனைத்தும் இருந்தாலும் இந்த உலகிற்கு வேண்டுவது செல்வமல்லவா? பொருளில்லார்க்கு இவ்வுலகு இல்லையே? ஆகவே, அந்தப் பொருளைத் தர வேண்டி அடுத்த மூன்று நாட்கள் செல்வத்தின் நாயகியான ஸ்ரீ தேவியை-லட்சுமியைவழிபடுகிறோம்.

அத்தனைச் செல்வங்களையும், உயர்வடையச் செய்வது சரஸ்வதியே அன்றோ. கல்வி அறிவு இருந்தால் தானே பெற்ற செல்வத்தைப் பேணிக் காக்க முடியும். ஆகவே, கடைசி மூன்று நாட்கள் சரஸ்வதியை-கலைமகளை, நாமகளை பூஜிக்கிறோம்.

சக்தியை, சிவனிடமிருந்து (ஜீவன்) பிரிக்க முடியாது. ஆகவே, இரண்டும் இணைந்த ஸ்வரூபமாக அர்த்தநாரி வடிவில் ஆண்டவனை வழிபடுகிறோம். செல்வம் செந்நிறத்தது. ஆகவே, செல்வத்தின் நாயகியை, ''ஹிரண்மயீம்'' பொன்னிற மேனியளாய், பொற்றாமரையில் வீற்றிருப்பவளாய் காண்கிறோம்.

வாக்தேவி தூய்மையானவள். கலை தூய்மையானது. ஞானம் தூய்மையானது. தூய்மையின் நிறம் வெண்மை. ஆகவே, சரஸ்வதி வெண் பட்டாடை உடுத்தி, வெள்ளைக் கலை பூண்டு, வெண்டாமரையில் வீற்றிருப்பவளாக உருவகப்படுத்தியுள்ளனர்.

செல்வத்தைப் பெட்டகத்தில் தானே பூட்டி வைக்கிறோம். ஆகவே, திருமகள் திருமாலின் மார்பகத்தில் உறைபவளாக வணங்கப்படுகிறாள். நாமகள் நான்முகனின் நாவில் உறைபவளாக சித்தரிக்கப்படுகிறாள். இப்படி ஆழ்ந்த உட்கருத்துடன் உருவகப்படுத்தியிருக்கிறார்கள் நமது முன்னோர்கள்.

**பொம்மைக் கொலு:**

பொம்மைக் கொலு கைவினைஞர்களின் கைத்திறனை எல்லாம் கையகப்படுத்தி, அழகு பொம்மைகளாக, தேவதைகளாக உருக்கொடுத்து, வண்ண வண்ண பொம்மைகளாக, வடித்தெடுக்கப்பட்ட பொம்மைகளை கொலு வைத்து வழிபடுகின்றோம்.

ஒன்பது படிகளில் வெவ்வேறு வி மான பொம்மைகளை வைப்பார்கள். முதல் மூன்று படிகளில் உலக வாழ்விற்குத் தேவையான அரிசி, பருப்பு தான்யங்களையும், அவற்றுடன் சம்பந்தப்பட்டவைகளையும் வைக்கின்றோம். இது தாமஸ குணத்தைக் காட்டுகிறது.

அடுத்த மூன்று படிகளில் இவற்றைக் காக்கும் ராஜா, ராணி படைகள் (இன்று போலீஸ் பொம்மைகள்) இவற்றை வைப்பார்கள். இவை ரஜோ குணத்தை குறிக்கும்.

மேல் மூன்று படிகளில் தெய்வ உருவங்களையும், கலசத்தையும் வைப்பார்கள். முதல் இரு குணங்களையும் கடந்து சத்துவ குணத்தை அடையும் வழியையே இந்தக் கொலுப்படிகள் நமக்கு உணர்த்துகின்றன. ★



திருக்கடவூர் ராஜகோபுரம்
திரு. என். ராமகிருஷ்ண – மயிலாடுதுறை

பிற்காலத்தில்தான் அரசன் அரண் மனையைப் போல ஆண்டவனின் கோயிலும் மாட மாளிகை, கூட கோபுரம் கொண்டதாகக் கட்டப் பட்டது.

தொல் பழங்காலத்தில் மரத்தடி யில் வைத்து வணங்கப்பட்ட ஆண்ட வன் பின்னர் குடிசைகளில் வைத்து வணங்கப்பட்டான். இருளன், காட் டேறி, காளி, மதுரைவீரன் போன்ற கடவுள்கள் குடிசைகளில் வைத்து வணங்கப்படுவதை இன்றும் காண லாம். பின்னர் செங்கல்லையும் சுண் ணும்பையும் பயன் படுத்திக் கோயில் எழுப்பும் பழக்கம் ஏற்பட்டது. சங்க காலத்திலும் அதற்குப் பிறகு கி. பி. 600 ஆம் ஆண்டு வரையிலும் கோயில் கள் செங்கற் கட்டடங்களாகவே விளங்கின. செங்கல்லையும், மரத்தை யும், பயன்படுத்திக் கோயில் எழுப் பியதைக் கடியலூர் உருத்திரங் கண் ணனர் என்னும் சங்கப்புலவர் அக நானூற்றுச் செய்யுள் ஒன்றில்,

# ○ கோபுரக் கட்டடக்கலை ○

தமிழ்நாட்டில் தமிழ் மக்கள் வளர்த்த கோபுரக் கட்டடக்கலை, இன்னும் உலக மக்களால் பெரிதும் வியந்து பாராட்டப்படுவதாகும். தமிழகக் கோபுரக் கட்டடக்கலைக்கு ஈடானதோ அல்லது எடுப்பானதோ உலகில் எங்கேனும் இல்லை என்று கண்டோர் அனைவரும் அறுதியிட்டுக் கூறுகின்றனர்.

தொல் பெரும் பண்டைத் தமிழ கத்தில் அரசன் அரண்மனையில் வாழக் கற்றுக் கொண்டிருந்த போது கூட ஆண்டவன் மரத்தடியில்தான் வைக் கப்பட்டு வழிபாடு செய்யப் பட்டான். வில்வமரம், கடம்பமரம் தில்லைமரம், மகிழமரம், ஆலமரம், வேப்பமரம், மாமரம் போன்ற மரத் தினடி நிழலிலே கடவுட் சிலைகளை வைத்து வழிபாடு செய்வதை இன் றும் காணலாம். ஒவ்வொரு பெரிய கோவிலும் அந்தக் கோயில் ஆண்ட வனோடு ஒரு மரத்தை இணைத்துச் சொல்வதைப் பார்க்கிறோம். அத னைத் திருமரம் என்று தமிழிலும், ஸ்தல விருக்ஷம் என்று வடமொழியி லும் கூறுவதை அறியலாம்.

**அரக்கோணம் பாண்டியன்**

இட்டிகை நெடுஞ்சுவர்
விட்டம் வீழ்ந்தென
மணிப்புருத் துறந்த
மரஞ்சேர் மாடத்து
எழுத்தணிக்கடவுள்
போகலிற் புல்லென்று
ஒழுகு பலிமறந்த
மெழுகாப்புற்றினை

என்று இடிந்த கோலத்தில் காட்சி அளிக்கும் செங்கல் கோயில் ஒன்றி னைக் குறிப்பிட்டுள்ளார். சோழன் செங்கணன் கட்டிய 78 கோயில் களும் செங்கற் சுண்ணும்பால் ஆன வையே.

பல்லவர்கள் ஆட்சிக்கு வந்தபிறகு தான் குகைக்கோயில்கள் தோன்ற

லாயின. கி. பி. 600 முதல் கி. பி. 630 வரை அரசாண்ட மகேந்திர வர்ம பல்லவன் காலத்தில்தான் கோயில் கட்டட அமைப்பில் புது முறை புகுந்தது. குடவறைக் கோயில்கள் உருப்பெற்றன. பெரிய கற்பாறைகளைக் குடைந்து குகைக் கோயில்களை அவன் உருவாக்கினன். சிற்பங்களாகச் செதுக்கப்பட்ட பாறுங்கற்களை முறைப்படி அடுக்கிக் கோயிலையும் கோபுரத்தையும் எழுப்பும் கட்டக்கலை கி. பி. 7-ஆம் நூற்ருண்டிலிருந்துதான் அறிமுகமாயிற்று. இப்படிப்பட்டக் கோயில்தான் கற்றளி என்று அழைக்கப்படுகிறது. கற்றளி அமைக்கும் முறை நரசிம்ம வர்மபல்லவன் காலத்தில் இருந்து தோன்றியது எனலாம். மாமல்லபுரத்திலுள்ள கடற்கரைக் கோயில், காஞ்சி கைலாசநாதர் கோயில் ஆகியவை முதன் முதலில் அமைக்கப்பட்ட கற்கோயில்கள் என்று சொல்லலாம்.

கோயில் அமைப்புகளில் பலவிதங்கள் இருக்கின்றன. மலைகளிலுள்ள குகைகளில் செதுக்கி அமைக்கப்படும் கோயில்கள் குகைக் கோயில்கள் எனப்படும்.

பாறைகளைச் செதுக்கி அமைக்கப்படும் கோயில்கள் குடவறைக் கோயில்கள் எனப்படும். திருச்சி, மேலச்சேரி, மாமண்டூர், மாமல்லபுரம், தளவனூர், சித்தன்னவாசல் போன்ற இடங்களில் காணப்படுபவை குடவறைக் கோயில்கள் ஆகும்.

அடுக்கடுக்கான மாடிகளையுடையனவாக அமைக்கப்படும் கோயில்கள் மாடக் கோயில்கள் எனப்படும்.

வட்டமாகவோ, நான்குபட்டை, ஆறுபட்டை, எட்டுப்பட்டையுடையனவாக நீண்டு உயர்ந்து வளரும் கோபுரக் கோயில்கள் கூடக் கோபுரக் கோயில்கள் எனப்படும்.

வட்டமான விமானத்தை உடையதாக அமைக்கப்படும் கோயில், தரக் கோயில் எனப்படும்.

யானையின் பின்புறம் போல் விமானம் அமைக்கப்படும் கோயில் யானை வடிவுக்கோயில் எனப்படும்.

கொருடி மரத்தினுல் அமைவது கொருடிக் கோயில் என்று அழைக்கப்படும். யானை முதுகு போல் அமையும் கோயில் ஆலக்கோயில் என்று கூறப்படும்.

பலபட்டைகளையுடையதாக அமைக்கப்படும் கோயில் மணிக் கோயில் என்று கூறப்படும்.

நான்கு பட்டை விமானத்தை உடையது இளங்கோயில் என்று அழைக்கப்படும்.

இவை போன்று விதவிதமான கோபுரக் கட்டடக்கலைகளைப்பற்றித் தமிழகச் சிற்ப நூல்கள் சிறப்பாகச் செப்புகின்றன. ★



ஸ்ரீ சாமுண்டேஸ்வரி கோயில் — மைசூர்,
திரு ஜி. சோமசேகர் — கோலார்,



# விசுவரூபம் எடுத்த துவாரகாபதி

மாயச் சூதில் சிக்கி நாட்டை இழந்ததுடன், பன்னிரெண்டு ஆண்டு வனவாசமும், ஓர் ஆண்டு அஞ்ஞான வாசமும் அனுபவித்த பாண்டவர்கள், இழந்த நாட்டைக் கௌரவர்களிடமிருந்து திரும்பப் பெற எத்தனித்தனர். சமாதான முறையில் தமக்குரிய நாட்டைப் பெறுவதில் நாட்டம் கொண்ட தருமனும், கண்ணனைத் தூதனாக அத்தினபுரி அனுப்ப முடிவு செய்தான். ''துரியோதனன் நாட்டை அளிக்க மறுத்தால் ஐந்து ஊர்களையாவது பெறவேண்டும்; அதுவும் இல்லையேல் ஐவருக்கும் ஐந்து இல்லங்களையாவது கேட்க வேண்டும்''. இதுவே தருமர் கண்ணனிடம் வேண்டிய வரம்.

பல வளங்கள் நிறைந்த அத்தினபுரியை அடைந்த கண்ணன் தமக்கு அளிக்கப்பட்ட கோலாகலமான வரவேற்பை ஏற்றபின் விதுரனின் மாளிகையில் அன்றிரவைக் கழித்தான். மறுநாள் காலையில் பல்வேறு அரசர்களும் வீற்றிருக்கும் கொலுமண்டபத்தை அடைந்து தனது தூதுரையை விளம்பினான்; ''முன்பு அளித்த வாக்கிற்கு ஏற்பப் பாண்டவர்கள் கானக வாழ்வை முடித்துவிட்டனர். அவர்களுக்கு உரிய நாட்டை நட்பு முறையில் அளித்தால் நல்ல வாய்மை உடையவன் என்று துரியோதனன் புகழப்படுவான். அவ்வாறு உரிய நாட்டை அளிக்க மறுத்தால் ஆண்மையும் புகழும் அன்று''. துரியோதனனோ ''சூதில் இழந்த நாட்டைப் பாண்டவர்கள் கவர எண்ணினால் யான் எளியனோ? எது நடப்பினும் ஒரு ஈ அமரும் இடம் கூட அளிக்க முடியாது'' என்று மறுமொழி கூறினான்.



''தன் தந்தையின் ஆவலைப் பூர்த்தி செய்யும்பொருட்டு அரியணையும் திருமணமும் துறந்தான் உன் குலத்து


திரு. எம். ராஜகோபாலன்,
சென்னை-41.


உதித்த முதல்வன் (வீடுமன்). ஒரு குலத்தில் இருவர் உடன் பிறந்து உரிமை எய்தினால் இருவரும் ஒத்து வாழ்வது இயற்கை. உறவினர்க்கு உரியதை அளிக்க மறுக்கும் குருகுலத்தவர் செயல் நன்று அன்று' என்று அண்ணலும் கூறினான்.

சினத்தால் கண்கள் தீப்பிழம்பாக மாற, துரியோதனன் பதிலளித்தான்: ''அனந்தம் தாங்கும் அவனி வீரர்களுக்கே உரியது. அந்த உரிமையை வீரத்தினால் நிலைநாட்டுவேன்'' போர் செய்வதே முடிவானால் அம்முடிவை உறுதியாகக் கையில் அடித்துச் சத்தியம் செய்யுமாறு கண்ணன் கேட்கவும், அரவக் கொடியோன் கண்ணனையும், பாண்டவர்களையும் இழிந்த மொழிகளால் பழிக்கலானான். ''இழிந்த குலத்தில் பிறந்து, ஆநிரை

மேய்த்து உரலோடு பிணைக்கப்பட்டதை மறந்து உயர் குலத்தவரின் மொழியைச் சந்தேகித்தல் தகுமோ? இரு தாயாருக்கும், ஐந்து தந்தையருக்கும் தோன்றிப் பிறப்பு அற்ற பாஞ்சாலியை (நெருப்பில் தோன்றியவள்) மணந்தவர் எனக்கு இணை யாவாரோ? ஐவருக்கும் உரியாளை அவையில் துயிலுரிந்தபோது மானம் அற்று இருந்தவரைக் கண்டு யாம் அஞ்சுவோமா? சீறும் சிங்கத்தைக் கண்டு மதயானை அஞ்சுமோ? சிலம் அற்றவர் சிவந்தபோது அதனைத் திதிலா மேன்மக்கள் பொருட்படுத்தமாட்டார்'' அவ்வாறே கண்ணனும் மறுமொழி ஏதும் கூறாமல் விதுரனின் மாளிகையை அடைந்தார்.

ஐவர் பொருட்டு நாடு கேட்க வந்த யாதவனை அவமதிக்கும் விதம் பற்றிக் கௌரவர்கள் நள்ளிரவில் மந்திராலோசனை நடத்தினர். ''வலையில் சிக்கிய புலியை எயினர் அழிப்பது போல இருள் அகலுமுன்னர் மாயனை வளைத்துக் கொல்வது முறை'' என்று கண்ணில்லா மன்னன் திருதராட்டிரன் இயம்பினன். கௌரவர்களுள் நல்ல குணங்களின் இருப்பிடமான ஒரே மனிதன் துரியோதனன் தம்பி விகர்ணனே. அவனும் ''இதுவரை தூதரை வையகத்தில் எவர் கொன்றுர்? பிணியில் மிக்கோர், வேதம் முனிவரர், தோத்திரம் பொழிபவர், மாதர், தூதுவர், மூத்தவர், இளையவர் ஆகியோரைக் கொல்லுவது நரகத்திற்கு வழி தேடுவது போலாகும். பழி உடைய பகைவரும் விருந்தினராக நம் பதிக்கு வந்தால் அவரைக் கொல்லுவது பாவம் மேலும் ஏழு கடலளவு சேனை சூழினும் கடல் வண்ணனைச் சிறை செய்ய இயலாது''.

துகிலுரிந்த வீரனன துச்சாதனனும், ''இளையவரை மந்திராலோசனை மண்டபத்திற்கு அழைத்தது தவறு'' என்று கூறியபின் அனைவருமாக விதுரன் மாளிகைக்கு எரியூட்டி இருவரையும் அழித்தலே நன்று என ஆலோசனை அளித்தான். கொடுத்துச் சிவந்த கைகளை உடைய தேரோட்டி மகனும் ''செங்கதிர் எழுந்து சீறினல் இருள் அதன் முன் நிற்காது; வெம்கணை ஒன்றினல் கண்ணனை முடித்து விடலாம்'' என்

---

ருன். சுபலன் மகனை சகுனியும் "அந்த வஞ்சகன் நம் நகர் நீங்கிச் சென்றால் பாண்டவர்களுடன் சேர்ந்து நமது அழிவிற்கு வழி வகுப்பான். மாயனை மோசத்தால் வெல்வோம்; தூதுவரைக் கொல்லல் தகாது; ஒரு பெரிய பள்ளத்தின் மேல் ஆசனம் அமைத்து மாயனைச் சிறைபிடிப்பதே சிறந்தது'' என்று செப்பினன்.

'' கொல்லுவது இயற்கை அன்று
குழிபறித்து அரக்கரோடு
மல்லரை இருத்தி மேலோர் ஆசனம்
வகுத்து நானே
எல்லிடை அழைத்து வீழ்த்தி
இகலுடன் விலங்கு பூட்டித்
தொல்லருஞ் சிறையில் வைத்தல்
தூதர்க்குரிமை என்றான்''

மாமனின் யோசனையை மருமகனும் ஏற்று இரவில் ஆழமான நிலவறை ஒன்றை அமைத்தான். அப்பெரும் நிலவறையை வேயின் பிளப்பினால் நிறைத்து மூடிய பின், அதன் மேல் விலை மதிப்பற்ற அரும்பெரும் மணிகளான ஒரு ஆசனத்தை இருத்தினன். அந்த அழகிய ஆசனத்தின் மேல் வண்டுகள் மொய்க்கும் மாலைகள் உடைய மேற்கட்டியைக் கட்டி அலங்கரித்தான். நிலவறையில் ஒரு இலட்சம் அரக்கர், இரண்டு லட்சம் மல்லர், பப்பரர், நான்கு இலட்சம் வில் வீரர், நாற்பது லட்சம் பல்படை வீரர் ஆகியோரையும் இருத்தினன்.

அடியவர் உள்ளத்திலுள்ள அஞ்ஞானத்தை அகற்றும் நெடியமால் வீற்றிருக்க வஞ்சனையான ஆசனத்தை அமைத்த கொடியவனின் பழிக்கு அஞ்சிய இரவும் வெளியேறியது. இந்திரன் மாளிகையில் ஏற்றிவைத்த தீபம் போல ஆதவனும் எழுந்தான். "ஆழி அம் தோன்றலே துளபமாலே யாதவ குலத்தோர் ஏறே, எழுந்தருள்க'' என்று தூதுவர் இறைஞ்ச மாயத்தில் வல்ல கண்ணனும் துரியோதனன் அவை அடைந்தான். நச்சரவினை ஒத்த விடமுடைய அரவக் கொடியோனும் பொய் அன்புடன் நீலவண்ணனை ஆசனத்தில் அமருமாறு வேண்டினன். துரியோதனின் வஞ்சனையை எண்ணிக் குறுநகை புரிந்த முகத்துடன் கிருஷ்ணனும் ஆசனத்தில் அமர, நெறு நெறு என அது முறிந்து நிலவறையில் விழுந்தது. பெருஞ்சினம் பொங்கியமுகத்துடன், கண்ணனும் உலகம் முழுதும் வியாபிக்கும் மாபெரும் உருவம் கொண்டான்.

முறுகு சினத்துடன் அடி அதலத்துற
முடி ககனத்து உற
அஞ்சினம் அஞ்சினம் என்றுவிரைந்து
உயர் அண்டர் பணிந்திடவும்
துஞ்சினம் இன்று எனவல்பணியின்
கிளை துன்பம் உழந்திடவும்
வஞ்சம் மதம் கொடு வஞ்சகன் இன்று
இடு வஞ்சனை நன்று இது என
நெஞ்சில் வெகுண்டு உலகு ஒன்று
படும்படி நன்று நிமிர்ந்தனனே

கண்ணனுடைய கால்களினால் உதைக்கப்பட்ட மல்லர், பப்பரர், வாள்வீரர் போன்றோர் பலரும் இடியைக்கண்டு அஞ்சிய நாகங்கள்போல் அஞ்சி நடுங்கினர். நிலவறையில் பதுங்கியிருந்த வில்வீரர்கள் தங்கள் தலைகள் துண்டிக்கப்பட்டு முன்பு இந்திரனால் தாக்கப்பட்டு தனது மூன்று சிகரங்களை இழந்த மேருமலையை ஒத்து விளங்கினர். கார்மேக வண்ணன் தாக்கியதால் தோள் அற்றுப் போன வாள்வீரர்கள் தேவேந்திரனால் அழிக்கப்பட்ட மலைகளைப் போல காட்சி அளித்தனர். கூரிய வேல் ஏந்திய படை மறவர், கண்ணனின் மலர்ப் பாதங்கள் பட்டு மார்பு புண்ணுற்று, சூரனை வென்ற வேலவனால் துளைக்கப்பட்ட கிரௌஞ்சகிரி எனும் குன்றை நிகர்த்தனர். சுக்கிரீவனுக்குத் தனது வலிமையைக் காட்டும் பொருட்டு இராமபிரான் இறந்து கிடந்த துந்துபி எனும் பலவானுடைய எலும்புக் கூட்டைக் கட்டை விரலால் தூக்கி எறிந்தான்; அது போலவே பப்பர வீரர்கள் கண்ணனின் கால்நகத்தால் தூக்கி எறியப்பட்டனர்.

முன்பு அகத்தியரால் பூமியில் அழுத்தப்பட்ட விந்திய மலையைப் போல் கண்ணனால் பூமியில் அழுத்தப் பட்டுப் புதையுண்ட அவுணர்கள் அல்லலுற்றனர். அமரருக்கு அமுதம் அளிக்கும் பொருட்டுக் கரிய கடலில் சுழன்ற மந்தர மலையைப் போலக் கண்ணனால் பம்பரம் போலச் சுற்றி எறியப்பட்ட வீரர்கள் சுழன்றனர். மாலின் முஷ்டி தாக்கி நிலவறையில் எறியப்பட்ட மல்லர்கள் இராவணன் மீது படையெடுத்த வானர வீரர்கள் கடலில் சேது கட்டும் பொருட்டு எறிந்த கரிய பாறைகளைப் போல விளங்கினர்.

தும்பிகள் மொய்க்கும் துளபமாலையோன் மேகம் முழங்குவது போல அண்ட முகட்டினோடு பொருந்தி நின்று சிரித்தான். பலத்த காற்று எழுவது போலவும் பிரளய வெள்ளம் தோன்றுவது போலவும் ஒலி எழுந்தது; கண்ணனின் கண்களில் கனல் வெளிப்பட்டது.

கொண்டல் முழக்கென அம்புலியைக்
கடல் கொண்டெழுதற்கு எதிரும்
சண்டம் முழக்கென வன்பவனக்கினை
தந்த முழக்கெனவே
வண்டின மொய்தெழு வண்டுள
வந்தொடை வண்டு வரைத் திருமால்
அண்ட முகட்டுற நின்று சிரித்தனன்
அம்கண் நெருப்பு எழவே

கண்ணனின் பற்பல திருக்கைகள் தனித்தனியே நின்று போரைச் செய்யக் கூடியவை; அவற்றுள் சில கடல் நீரை முழுமையாகக் கொள்ளும் தகுதி வாய்த்தன; சில தேவலோகக் கற்பகத் தருவை முறிக்க வல்லன; வேறு சில திசை யானைகளை இடத்தை விட்டுத் தள்ள வல்லன; வேறு சில மேரு போன்ற மலைகளைப் பெயர்கக வல்லன.

ஒன்றுபடக் கடல் அம்பு முகப்பன
உம்பர் குலம் தருவும்
சென்று முறிப்பன எண் திசையில்
குல சிந்துரம் எற்றுவ எண்
குன்றம் உடைப்பன பைம்பொன் உரம்
கிரிகொண்டு திரிப்பன ஆல்
அன்று தனித்தனி நின்று
மலைத்தருள் அம்கைகள் பல்பலவே''

உலகைக் காப்போனின் கைககள் பவளவாயினில் சங்கங்களை வைத்து ஒலி எழுப்பின! சில கைகள் சுடுகணை களையும், கருடாத்திரங்களையும் இறைத்தன; சில கைகள் நீண்ட விற்களை வளைத்தன; பல கைகளில் வளை தடி வேல், உலக்கை, கலப்பை, வச்சிரம், வாள், தண்டம் போன்ற ஆயுதங்கள் இருந்தன.

கண்ணனுடைய கரங்களில் சில, எதிர்ப்பவர்களை அழிக்கும்கால்களில் வீரக் கழல்களை கட்டின; திருமகள் வீற்றிருக்கும் மார்பில் நறுமண மாலைகளையும் கண்ணைக் கவரும் அணிகளையும் சில கரங்கள் அணிவித்தன; இவ்வாறு எதிர்த்தாரை இயமனிடம் அனுப்பும் ஆற்றல்மிக்க பல்லாயிரக் கணக்கான திருக்கரங்களில், காண்பவரின் கண்கள் கூசுமாறு ஒளிபரப்பும் ஆயுதங்களை ஏந்தியவாறு தோற்றம் அளித்த நீலவண்ணனைக்கண்ட அரவர்களும், தவசிகளும் மனத்தால் திகைத்து, யாக்கையால் பணிந்து, வாயினால் வழிபாடு செய்தனர்.

நான்முகன் உருவம் கொண்டு உலகைப்படைப்பவனும், உயர்ந்தவேதங்களை ஓதுபவனும் கண்ணனே! உருத்திரன் உருவில் அழிக்கும் தொழிலை நடத்துபவனும் அவனே! புவனங்களைக் காத்து இரட்சிக்கும் ஆதிமூலமும் அவனே! இத்தகைய முத்தொழிலுக்கு அதிபதியான பரம்பொருள் சினம் தணிந்து தங்களை ஆட்கொள்ளுமாறு அனைவருமே இறைஞ்சினர்.

"மாதவனே முனியேல் எமை ஆளுடை
வானவனே முனியேல்
யாதவனே முனியேல்
இதயத்திலிருப்பவனே முனியேல்
ஆதவனே முனியேல் மதிவெங்கய-
லானவனே முனியேல்
நீதவனே முனியேல் முனியேல்"
என நின்று பணிந்தனர்.

விடுமன், கர்ணன், திருதராஷ்டிரன், அவையிலுள்ள அரசர் ஆகிய அனைவரும் அறியாமையால் தாங்கள் செய்த பிழைகளைப் பொறுக்குமாறு கைகுவித்து இறைஞ்சினர்.

கண்ணி பொருத்தருள் வெண்ணெய்
அருந்திய கள்வ பொருத்தருள் கார்
வண்ண பொருத்தருள் வாம
பொருத்தருள் வரத பொருத்தருள் நீ
திண்ணம் மனத்து உணர்வு ஒன்றும்
இலாதவர் செய்து பெரும்
பிழையென்று
அண்ணல் மலர்க் கழல் சென்னியில்
வைத்து எதிர்நின்று துதித்தனரே

இவ்வண்ணம் ஆயிரம் கண்ணனும் (இந்திரன்) பிற அமரரும் பூவுலக மன்னவர்களும், மலர் மேல் இருந்த வள்ளலும் (பிரமன்) திருமாலின் ஆயிரம் திருநாமங்களை உள்ளன்போடு ஜெபிக்கவும், "மூவரும் ஒன்று என நின்ற நாதனும் (கண்ணன்) அண்டம் முழுவதும் வியாபித்து நின்ற தனது விசுபரூபத்தை ஒடுக்கி துவாரகாபதியாகக் காட்சியளித்தான். 'தன்னிலும் மிக்கோர் இல்லை' எனச் சதுர்மறை அருளிய நாதனின் பேருருவம் கண்ட அரவக் கொடியோன் சிறிதும் அச்சம் கொள்ள வில்லை; இருக்கையைவிட்டு இடம் பெயரவில்லை; மாலின் புகழைப் போற்றவும் இல்லை.

"தொல்லரும் அவையில் சகோதரர்களும், ஆயிரம்மன்னர்களும் சூழ அமர்ந்திருக்கும் நரர்கோவே! வஞ்சனையால் என்னை அழிக்க முயன்ற உன் செயல் நன்று! எதிர்ப்பவரை வானுலகத்திற்கு அனுப்பும் ஆற்றல்படைத்த என்னால் ஒரு கணத்தில் உன் குலம் முழுவதையும் வேரறுக்க முடியும். வெஞ்சமரில் ஆயுதம் தரிப்பதில்லை என்று நான் அளித்த உறுதி மொழியையும், அவையில் புயவலிமிக்க பாண்டவர் கொண்ட வஞ்சினத்தையும் கருதியே உன்னையும் உன் சோதரரையும் இப்போழுது உயிருடன் விட்டு விடுகிறேன்" என்று உறுதியுடன் அறிவித்த கண்ணன் தாம் வந்த வழியே பயணமானான்.



## சிவராத்ரி அபிஷேக மஹாத்மியம்

சிவராத்திரி அன்று ஆறு கால அபிஷேகத்திலும் சிவபெருமானுக்குக் கீழ்க்கண்ட திரவியங்களை வழங்குபவர்கள இன்னின்ன பலன்களை அடைவர் என்று அறநூல்களில் கூறப்பட்டிருப்பது பின்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| தைலாதிகள் | – பக்தி | விபூதி | – ஞானம் |
| சூர்ணாதிகள் | – சம்பத்து | சந்தனம் | – சுவர்க்கபோகம் |
| பழ வகைகள் | – ஜன வசிகரம் | பஞ்சகவ்வியம் | – பாவநிவர்த்தி |
| பஞ்சாமிர்தம் | – தீர்க்காயுள்-நீடிய வாழ்வு | ஸ்வர்ணம் | – வைராக்கியம் |
| | | ஸ்தபனம் | – அசுவமேத யாகப் பலன் |
| பால் | – சாந்த குணம் | | |
| தயிர் | – திடகாத்திரம் | பன்னீர் | – புகழ் |
| தேன் | – சங்கீதவன்மை | வஸ்திரம் | – சம்பாவனை |
| நெய் | – சுக வாழ்வு | புஷ்பம் | – சந்தோஷம் |
| கரும்புச் சர்க்கரை | – சாஸ்திர தேர்ச்சி | கற்பூரம் | – அத்வைதமுக்தி |
| இளநீர் | – நன்மக்கட்பேறு. | | |

திரு. பி. ரவீந்திரன்-திப்பிராஜபுரம்

“வேதாந்த தேசிகனே இன்னுமொரு நூற்றாண்டிரும்” என்ற வாழ்த்தொலி ஏழுலகும் கடந்து விண்ணைப் பிளந்து ஸ்ரீ, பூமி, நீளா ஸமேதனாய் அனந்த, கருட விஷ்வக்ஸேனாதி நித்ய ஸூரிகளுடனும் எண்ணிறைந்த முக்தர்களுடனும் சேஷ பர்யங்காஸனத்தில் ஸ்ரீ வைகுந்தத்தில் வீற்றிருக்கும் எம்பெருமானை வைகுந்தநாதன் திருச்செவிகளில் வந்தடைந்தது.

பரமபதநாதன் அருகில் வீற்றிருந்த ஸ்ரீஸ்வாமி வேதாந்ததேசிகனைக் கண் குளிரக் கடாஷித்தருளினான்!

புரிந்து வீற்றிருக்கும், எம்பெருமானான திருவேங்கடவனின் அவதார தினத்தில் அந்த எம்பெருமானின் திருமணியின் அம்சமாக அவதரித்தவேங்கடநாதன், கவிதார்க்கிக கேஸரி, சர்வ தந்திர ஸ்வதந்திரர் என்ற விருதுப் பெயர்களையுடைய ஸ்ரீ ஸ்வாமி வேதாந்த தேசிகனின் அவதார வைபவம் யாவரும் அறிந்ததேயாகும்.

ஸ்ரீ ஸ்வாமி தேசிகன், அனைத்து ஜீவகோடிகளும் தங்கள் பாவங்களைத் துலைத்து கடைத்தேறுமாறு ப்ரப்பத்தி சாஸ்திரமாகிய சரணா

திரு அஷ்டாக்ஷரம், த்வயம், சரமஸ்லோகம் என்ற மூன்று தாரக மந்திரங்களும் நமது ஸித்தாந்தத்தின் ப்ரதான மந்திரங்கள். இந்த மூன்று மந்திரங்களின் ரகஸ்ய தத்வார்த்தத்தை விளக்கும் வாயிலாக இந்த மூன்றும் தத்வம், ஹிதம், புருஷார்த்தம் என்ற மூன்றையும் பற்றி விளக்குபவையாவே உள்ளன என்று விவரித்து எடுத்துரைத்து சரணாகதியின் பெருமையை விரிவாகவும், விளக்கமாகவும் எடுத்துக் கூறுகிறார், ஸ்ரீஸ்வாமி தேசிகன் தமது க்ரந்தங்களில்.

# தஞ்சப் பரகதியைத் தந்தருள்வோன் வாழியே!

வேங்கடநாதா! உலகத்து ஜீவகோடிகளை உய்விக்க யாம் வேத ஸாஸ்திரங்களைப் பிறப்பித்தோம், விபவாவதாரங்களை எடுத்தோம். அபிநவ தசாவதாரங்களாக ஆழ்வார்களை அவதரிக்கச் செய்து அமுதினும் இனிய தமிழ்ப் பாசுரங்களை பாமாலைகளாகத் தொடுத்து அணிவிக்கச் செய்தோம். இவை யாதொன்றாலும் முடியாததை உமது உபதேச பரம்பரையில் வந்த ஆசார்ய ஸார்வபௌமர்கள் மூலம் ப்ரபத்தி செய்து இங்கு வந்தடையும் முக்தர்களின் எண்ணிக்கை அளவிலடங்காது பெருகி வருகிறது. வைகுந்த விண்ணகரில் பெருத்த இடநெருக்கடி ஏற்படும் போலிருக்கிறது. அந்த அளவுக்கு சரணாகதி சாஸ்திரத்தை எல்லோரும் அறிந்து உய்யுமாறு செய்திருக்கிறீர். உமக்கு “தஞ்சப் பரகதியைத் தந்தருள்வோன் வாழியே!” என்ற வாழித் திருநாமம் மிகவும் பொருத்தமானது. அந்தத் திருநாமம் என்றென்றும் நிலைத்திருப்பதாக” என்று திருவாய் மலர்ந்தருளினான்.

புரட்டாசித் திருவோணத் திருநாளாகிய, ஸப்தகிரியில் ஆட்சி

கதி வேதத்தைப் பற்றி விரிவாக விளக்கி, சரணாகதியின் பெருமையையும், அதனால் விண்ணுலகை அடையும் வழியையும், அதனால் கிடைக்கும் பகவத், பாகவத, ஆசார்ய கைங்கர்ய ரூபமான பேரின்பமான பலனைப் பற்றியும் யாவரும் அறிந்து, உணர்ந்து, கடைப்பிடித்து உய்யுமாறு செய்த உத்தம வள்ளல்.

தத்வம், ஹிதம், புருஷார்த்தம் என்ற மூன்றும் நம் வசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் அடிப்படையான ஜீவநாடிகள். தத்வம் என்பது பரதத்வமான எம்பெருமான், சேதன தத்வமான ஜீவகோடிகள், அசேத தத்துவமான உயிரற்றவை இவற்றைப் பற்றியும், பரதத்வமான எம்பெருமானுக்கு மற்ற இரண்டும் கட்டுப்பட்ட அடிமைகள் என்பது பற்றியும் விளக்குவது. ஹிதம் என்பது எம்பெருமான் திருவடிகளினை அடையும் வழி அல்லது உபாயம். வேதாந்தகுரு சரணாகதியையே ப்ரதான உபாயமாக விளக்குகிறார். புருஷார்த்தம் என்பது பகவத் கைங்கர்யம் முதல் ஆசார்ய, பாகவத கைங்கர்யம் வரை உள்ள பேரின்பமான பலன்.

வேதாந்த குரு, ஸ்தோத்திரங்கள், காவ்ய நாடக க்ரந்தங்கள், வ்யாக்யானக்ரந்தங்கள் தமிழ் ப்ரபந்தங்கள் என பல அருளிச் செய்திருக்கிறார். இவை யாவற்றிலும் தத்வத்ரயம், ரஹஸ்யத்ரயம் இவற்றை ஒருங்கிணைத்து சரணாகதி வேதத்தையே விரிவாக உபதேசிக்கிறார்.

ஸ்ரீ ஸ்வாமி அருளிச் செய்த ஸ்தோத்திர கிரந்தங்களைப் பராமர்சித்தால்; ஸ்தோஷ்யாமி- “உண்மையான குணங்களை வர்ணிப்பதால்

திரு. எஸ். கோவிந்தராஜன்-சிதம்பரம்.

கைங்கர்யம் செய்யப் போகிறேன்” என்ற வெளிப்படையான பொருளுடன் காணப்பட்டாலும் உண்மையில் சரணாகதி தத்துவத்தை விளக்குவனவாகவே உள்ளன. பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை இவற்றுள் ஆழ்வார்களைப் போலவே ஸ்வாமி தேசிகனுக்கும் அர்ச்சாவதார எம்பெருமான்களிடம் ஈடுபாடு அதிகம். அதை அடியொற்றியே பரதத்வமான எம்பெருமானைக் குறித்து ஸ்தோத்திரங்களான ஹயக்ரீவ ஸ்தோத்திரம் முதல் அச்யுத சதகம்

வரை எல்லாம் திவ்யதேச எம்பெரு மான்களைப் பற்றியும், அவர்களே உபாயமும் உபேயமும் ஆவார்கள் என்பதையும், அவர்களைச் சரணடைந் தால் வைகுந்தவிண்ணகரில் எம்பெரு மானை அடைவது நிச்சயம் என்பது பற்றியும் விளக்குகிறார். இவற்றுள் திருவேங்கடமுடையான் விஷயமான 'தயாசதகம் சரணாகத ரக்ஷகத்துவத் துக்கு முக்கியமான எம்பெருமானு டைய தயையைப் பற்றி விளக்குவ தாய் அமைந்துள்ளது. ஸ்ரீ, பூ, கோதா ஸ்துதிகள் ப்ராட்டி புருஷ காரியாய் சரணாகதனுககு எம்பெரு மானிடம் சிபார்சுசெய்வதாக அமைந் துள்ளது. ஸ்ரீ சுதர்சனாஷ்டகமும் ஷோடசாயுத ஸ்தோத்திரமும் ப்ர பன்னன் பாபங்களை திருவாழியாழ் வான் வேரறுத்து எம்பெருமான் திரு வடிகளை அடைய வழி செய்வதாய் அமைந்துள்ளது கருடதண்டகமும் கருடபஞ்சாசத்தும் நித்யஸூரி வைப வமாக அமைந்து உள்ளன. வைராக்ய பஞ்சகம் சரணாகதனுக்கு அவசியம் வேண்டியதான வைராக்ய குணத் தைப் பற்றி குறிப்பிடுகிறது. சரணா கதி தீபிகை, ஞாஸதசகம், விம்சதி, திலகம் ஆகியவை சாக்ஷாத்தாக ப்ரபத்தியின் ப்ரவாவத்தை விரிவாக எடுத்துரைக்கின்றன யதிராஜ ஸப்ததி ஆசார்ய ப்ரபாவத்தையும் ஆசார்ய முகமாக சரணாகதி செய்வ தைப்பற்றியும் விளக்குவதாக அமைந்துள்ளது.

காவ்யக்ரந்தங்களுள் "ஹம்ஸ ஸந் தேசம்" ஆசார்யன சிஷ்யனுக்காக எம்பெருமானிடம் சரணாகதி செய் யும் ஆசார்ய ப்ரபத்தியை எடுத் துரைப்பதாக உள்ளது. ஒரே இர வில், எம்பெருமான் திருவடிகளைத் தாங்கி அலங்கரித்து நிற்கும் பாது கைகளைப் பற்றிய பாதுக ஸஹஸ் ரத்தில்:

"ஸக்ருதபி புவநேஸ்மின் சார்ங்கிண: பாதுகேத்வாம்
உபநிஷதநுகல்பை ருத்தமாங்-கைர்ததாநா: |
நரகமிவமஹாந்தோ நாக முல்லங்கபந்த:
பரிசதி நிவிசந்தே ப்ராக்தநாநாம் குருணாம் ||

'ஹே பாதுகையே! உன்னை ஒருதர மாவது பக்தியுடன் தலையில் எழுந் தருளப்பண்ணிக்கொள்ளுகிறவர்கள், பாபத்தின் பலனை நரகத்தையும், புண்யத்தின் பலனை ஸ்வர்க்கத்தை யும் ஒழித்து ஸ்ரீ வைகுண்டத்தில் ஆசார்ய கோஷ்டியில் சேர்ந்து விடு கிறார்கள்' என்றும்,

"பாஸ்ய தாம்ந: ப்ரதிபாத நார்ஹம்
வதந்தி வித்யாம் மணிபாதுகேத்வாம்|
யத ஸதவை வாதிகமே ப்ரஜாநாம்
தூரீ பவத் யத்தர பூர்வமம்ஹ: ||

'ஹே பாதுகையே! ப்ரபத்தி பண் ணினவன் பாபங்களை உடனே எம் பெருமான் போக்கிவிடுவதுடன் தெரி யாமல் பண்ணும் பாபங்கள் அவனை அடையாமலும் செய்விக்கிறார் அது போலவே உன்னை சிரசில் தரித்துக் கொள்கிறவனுக்கும் சரணாகதி பண் ணின பலனையே அளித்து அருள்கிறார்' என்றும் வாதித்தருளி ப்ரபத்தியின் பெருமையை ஸ்தாபிக்கிறார்.

ப்ரபந்நஸந்தான கூடஸ்தரும் இவ் வுலகில் ஆசார்ய பரம்பரையின் தலை வருமாகிய நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழிக்கு ஸ்வாமி தேசிகன் சுருக்கமான வ்யாக்யானங் கள், "த்ரமிடோப நிஷத் தாத்பர்ய ரத்னாவளி, த்ரமிடோப நிஷத் ஸாரா வளி" என்று இரண்டு க்ரந்தங்கள் அருளிச் செய்திருக்கிறார். ப்ரபந்த ரக்ஷகனை எம்பெருமான் திருக்கல் யாண குணங்களையும், ப்ரபத்தியின் ஏற்றத்தை விளக்குவதாகவும் ஸாம வேத ஸாரமான திருவாய்மொழி அமைந்திருக்கிறது என்றும் ஸாதித் தருள்கிறார்.

'சில்லரை ரஹஸ்யங்கள்' என்று அழைக்கப்படும் ரஹஸ்யரஞ்ஜனி, ரஹஸ்ய ஸ்வாதிநீ என்ற க்ரந்தங்களையும் அவற்றிற்கு சிகரம் வைத்தாற்போல்" ரஹஸ்யத் ரயஸாரம்" என்ற அருமையான ரஹஸ்ய க்ரந்தத்தையும் அருளிச் செய்து உலகு உய்விக்க வழி செய்தி ருக்கிறார். தூப்புல் தோன்றிய வள் ளல் ரஹஸ்யத்ரயத்தையும் தத்வத் ரயத்தையும் அர்த்த பஞ்சகத்தையும் ஒருங்கிணைத்து அற்புதமாக சரணாகதி சாஸ்திரத்தை விளக்கி நாம் கடைத் தேற வகை செய்துள்ளார். உய்யு மாறு அறியாமல் தவிக்கும் நமக்கு ஸ்ரீஸ்வாமி தேசிகனின் க்ரந்தங்கள் வழிகாட்டும் தீப ஒளிகளாக விளங்கு கின்றன.



திருவனந்தபுரம் கோவிலில் அனந்த சயனத்தில் பத்மநாபன் பள்ளி கொண்டிருக்கிறான். பகவானின் திருமுகத்தை ஒரு வாசலிலும், திருவடியை ஒரு வாசலிலுமாய் மூன்று வாசலில் பெருமாளை தரிசிக்க வேண்டியுள்ளது. அவ்வளவு பெரிய திருமேனி. இந்த க்ஷேத்திரத் திற்கு யாத்திரை வந்த ஆளவந்தார் (ஸ்ரீராமானுஜரின் ஆசாரியர்) முதல் வாசலில் திருவடியை மட்டிலும் ஸேவித்துவிட்டு திரும்பி சென்று விட்டாராம். திருமுகத்தை ஸேவிக்க வேண்டாவோ என்று கேட்டதற்கு, அதற்கு அடியேனுக்கு அதிகாரமில்லை, அடியேனுக்கு திருவடியே போதும் என்றாராம்.

தகவல்: ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

## புருஷோத்தம யோகம்

### அத்தியாயம்—15.

### பகுதி—12.

பரமாத்மனுடைய சொரூபத்தைப் பற்றிய விளக்கம் இனிவரும் சுலோகங்களில் இடம் பெறுகிறது.

த்வாவிமௌ புருஷௌ லோகே
க்ஷரஸ்சாக்ஷர ஏவ ச |
க்ஷரஸ் ஸர்வாணி பூதானி
கூடஸ்தோக்ஷர உச்யதே ‖ (15-16)

'க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றும் உலகில் இரண்டே புருஷர்கள் இருக்கிறார்கள். வடிவெடுத்தவர்கள் எல்லோரும் க்ஷரன். கூடஸ்தனே அக்ஷரன் எனப்படுகிறான்.'

வேதங்கள் அனைத்திலும் பரமாத்மாவைப் பற்றிய விளக்கம் எம்முறையில் அமைகிறது? க்ஷரன், அக்ஷரன், உத்தம புருஷன் என்ற விதத்தில் அமைகிறது என பகவான் இந்த சுலோகத்தில் பகருகிறார். பரமாத்மா ஒருவரே. ஆனால் க்ஷர உபாதியுடன் கூடியிருக்கையில் க்ஷர புருஷன் எனவும், அக்ஷர உபாதியுடன் சேர்ந்திருக்கையில் அக்ஷர புருஷன் எனவும் இந்த இரண்டு உபாதிகளும் அற்ற நிலையில் பரமாத்மா அல்லது உத்தம புருஷன் எனவும் அழைக்கப்படுகிறார். 'உபாதி' என்றால் *limiting adjunct* என்பது பொருள். எங்கும் நிறைந்த வெளி அல்லது ஆகாசம் பானைக்குள்ளும் இருக்கிறது. பானைக்குள் உள்ள ஆகாசமும், அதற்கு வெளியில் உள்ள ஆகாசமும் ஒன்றே. இருப்பினும் பானைக்குள் உள்ள ஆகாசம் அல்லது வெளிக்கு பானை ஒரு 'உபாதி' ஆகிறது அதுபோல எங்கும் நிறைந்த ஆத்மன் நமது உடலிலும் இருக்கிறது. எனவே ஆத்மனுக்கு இந்த உடல் ஒரு 'உபாதி' ஆகிறது.

ஒரே மனிதன் மகனுக்குத் தந்தையாகவும், தந்தைக்கு மகனாகவும், சகோதரிக்குச் சகோதரனாகவும், அண்ணனுக்குத் தம்பியாகவும், மாமனுக்கு மருமகனாகவும் அமைவதற்கேற்ப அவன் பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறான். அது போல புருஷோத்தமனாகிய பரமாத்மா உபாதிகளின் காரணமாக க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றும் அழைக்கப்படுகிறான்.

ஏற்கனவே பகவான் இதே கருத்தை முந்தைய அத்யாயங்களில் விளக்கியிருக்கிறார். பதிமூன்றாவது அத்தியாயம் முதல் சுலோகத்தில் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்று குறிப்பிடப்பட்டதும், ஏழாம் அத்தியாயம் ஐந்தாம் சுலோகத்தில் பரா பிரகிருதி அபரா பிரகிருதி என்று குறிப்பிடப்பட்டதும்தான் இங்கு க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றும் குறிப்பிடப்படுகின்றன.

புரிதற்கு அரிய கருத்தைப் பல முறை பலவிதங்களில் கூறிப் புரிய வைப்பது பகவான் கீதையில் கடைப் பிடிக்கும் ஒரு அரிய முறையாகும்.

இக்கருத்தை விளக்க ஒரு நடைமுறை உவமானத்தைக் கீழே காண்போம்.

பம்பாயில் ஒரு தந்திரசாலி இருந்தான். தன் முகத் தோற்றத்தை மாற்றிக் கொள்வதும் மக்களை ஏமாற்றிப் பணம் பறிப்பதும் அவனுக்குக் கைவந்த கலையாகும். நான்கு இடங்களில் அவன் செயல்பட்டு வந்தான். மூன்று இடங்களில் அவன் வெவ்வேறு துறைகளில் தன் திறமைகளை வெளிக்காட்டினான். ஒரு இடத்தில் பாங்க் அலுவலகம், மற்றொரு இடத்தில் பத்திரிகை அலுவலகம், மூன்றாவது இடத்தில் ஒரு வியாபார நிறுவனம் ஆகியவற்றை அவன் நிர்வகித்து வந்தான். வெவ்வேறு விதமான உடையணிந்து வெவ்வேறு தோற்றங்களில் அவன் இந்த மூன்று இடங்களுக்கும் சென்று வேலையை மேற்பார்வையிடுவான். அவனது வீடு நான்காவது இடத்தில் இருந்தது. அவன் மக்களை ஏமாற்றிப் போதிய பணம் சேர்த்த பின்னர் ஒரு நாள் பாங்க் நஷ்டமடைந்து விட்டது. பாங்கின் மேலாளர் மரணமடைந்துவிட்டார் என்று பத்திரிகையில் செய்தி வெளியிட்டான். சில நாட்கள் கழிந்து விளம்பர நிறுவனம் திவாலாகி வட்டது, அதன் நிர்வாகி காலமாகிவிட்டார் என்றும் பத்திரிகையில் செய்தி வெளிவந்தது. கடைசியில் அச்சுப் பொருள்களின் அபரிமிதமான விலையேற்றம் காரணமாக பத்திரிகையும் மூடப்படுகிறது என்று சொல்லி பத்திரிகையின் நிர்வாகியும் திடீர் மரணமடைந்துவிட்டார் என்று விவரத்தை அவனே வெளியிட்டான். 'பல நாள் கள்வன் ஒரு நாள் அகப்படுவான்' என்பதற்கேற்ப ரகசிய போலீஸார் ஒரு நாள் அவனைக் கையும் களவுமாகப் பிடித்துக் கைது செய்து விசாரித்து சிறைக்கு அனுப்பி விட்டார்கள். நான்கு பெயர்களில், நான்கு இடங்களில், நான்கு விதங்களில் வேலை செய்தாலும் அந்த நபர் ஒருவன் தான் என்பது போல, பல பெயர்களையும் பல வடிவங்களையும் எடுத்துக் கொண்டாலும் பரமாத்மா ஒருவரே, அல்லது ஒன்றேயாகும்.

'अस्य त्रय आवसथा:'—என்கிறது உபநிஷதம். பரமாத்மனின் உறைவிடங்

கள் மூன்று. ஜாக்ரத் அல்லது நனவு நிலை அவனது காரியாலயம். சொப்பனம் அதில் அவனது தனி அறை. சுஷுப்தி அவனது ஓய்வு அறை.

கீதையின் இந்த பதினைந்தாவது அத்தியாயத்தில் பகவான் இதுவரை கூறியதை இங்கே தொகுத்துக் கூறுகிறார் என்பது ஒரு சிலரது கருத்தாகும். 'ஊர்தவ மூலம்......' என்ற சில சுலோகங்களின் வாயிலாக க்ஷரத்தைப் பற்றியும், 'மமைவாம்சோ ஜீவலோகே...' என்ற சில சுலோகங்களின் மூலம் அக்ஷரத்தைப் பற்றியும், 'யதாதித்ய கதம் தேஜோ...' என்பனவற்றின் மூலம் உத்தம புருஷனைப் பற்றியும் விளக்கிக் கூறியதை இந்த சுலோகத்திலும் அடுத்த சுலோகத்திலும் தொகுத்துக் கூறுகிறார் என்பது அவர்கள் கூற்று.

ஜகத்தைப் பற்றிய வர்ணனை இதற்கு முன் 'அபரா ப்ரகிருதி' என்று ஸ்திரீ லிங்கம் அல்லது பெண்பாலிலும், 'க்ஷேத்ரம்' என்று நபும்ஸக அல்லது பலர் பாலிலும், இங்கு 'க்ஷர புருஷன்' என்று ஆண்பாலிலும் தரப்படுகிறது. மூன்று பாலிலும் ஜகத் அல்லது பிரபஞ்சம் பற்றிய வர்ணனை எதைக் காட்டுகிறது? ஜகத்தில் லிங்க பேதம் அதாவது பால் வேற்றுமை கிடையாது என்பதைச் சுட்டிக் காட்டத்தான். எல்லா சரீரமும் பஞ்ச பூதங்களால் ஆகியவையே. ஜீவனுக்கு பால் வேற்றுமை ஏதும் கிடையாது. இன்று ஆணாக இருப்பவன் முன்பு பெண்ணாகவும், நபும்ஸகனாகவும் இருந்திருப்பான். இனியும் அப்படி இருக்கலாம். இந்த வேற்றுமைக்கு அப்பாற்பட்டவன் பரமாத்மா என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

अन्तः पुरुष रूपेण कालरूपेण यो बहिः—

அந்த: புருஷரூபேண கால ரூபேண யோ பஹி: அதாவது பகவான் இதயத்தில் புருஷோத்தம ரூபத்திலும், வெளியில் கால ரூபத்திலும் இலங்குகிறார் என்பர் சான்றோர்.

'க்ஷரஸ்ச அக்ஷரஸ்ச த்வௌ புருஷௌ ஏவ' - என்ற வாக்கியமானது ஒரே புருஷன் க்ஷரன், அக்ஷரன என்ற இரு வடிவங்களில் தெனபடுகிறான் எனபதை விளக்குகிறது.

சுவேதாஸ்வர உபநிஷதத்தில்,

क्षरं प्रधानं अमृताक्षरं क्षरः ।
क्षरात्मानौ भरते विश्वरूपः ।।

க்ஷரம் பரதானம் அம்ருதாக்ஷரம் ஹர: |
க்ஷராத்மானௌ பரதே விச்வரூப: ||

என்ற ஒரு வாக்கியம் வருகிறது இந்த கீதா சுலோகத்தின் கருததும மேற்காணும் உபநிஷத் வாக்கியமும் ஒன்றையொனறு சார்ந்திருககின்றன.

இந்த க்ஷரன் - அக்ஷரன் பற்றிய விளக்கத்தை பற்பல ஆச்சாரியார்கள் பலவிதங்களில் தந்திருக்கின்றனர். அவற்றைச் சுருக்கமாகக் கீழே காண்போம்.

ஸ்ரீ ராமானுஜாச்சாரியாரின் விளக்கம்:

கட்டுண்ட ஜீவனே க்ஷர புருஷன். உலகத்துடன் அவனுக்கு உள்ள அதிகமான பற்றுதல் காரணமாக அவன் க்ஷரன் என்று அழைக்கப்படுகிறான். இவ்வுலக பந்தத்திலிருந்து விடுபட்ட ஜீவன் அக்ஷர புருஷனாவான். இவ்விருவரிலிருந்தும் வேறுபட்டவரான ஸ்ரீமன் நாராயணர் உத்தம புருஷன். க்ஷரன், அக்ஷரன் இருவருமே ஜீவர்கள். இவர்களை இயக்குவது புருஷோத்தமன்.

ஸ்ரீமத்வாச்சாரியார்:

க்ஷரன் சாதாரண ஜீவன். ஸ்ரீலக்ஷ்மி தேவியே அக்ஷரன், இவ்விருவருக்கும் அதிபதியான புருஷோத்தமன் இவர்களிலிருந்து வேறுபட்டவன்.

ஸ்ரீதர சுவாமி:

இந்த ஜகத் அல்லது பிரபஞ்சமே க்ஷரன். ஜீவன்தான் அக்ஷரன். இவற்றிலிருந்து வேறுபட்ட பரமாத்மாவே புருஷோத்தமன்.

ஸ்ரீ வல்லபாச்சார்யஜி:

அழியும் இந்த உடலில் வசிக்கும் ஜீவனே க்ஷரனாவான். நிர்குண பிரம்மமே அக்ஷரன். இந்த அக்ஷர நிர்குண பிரம்மம்தான் பகவானுடைய இருப்பிடம். அந்த இடத்தின் ஈசுவரன் மற்றும் யஜமானரான ஸ்ரீ கிருஷ்ணர் புருஷோத்தமன்.

ஸ்ரீ சங்கராச்சாரியார்:

ஒரே தத்துவமே மூன்று பெயர்களால அழைக்கப்படுகிறது. காரணம் கார்யம் ஆகிய இரண்டில் கார்ய உபாதியுடன் கூடிய புருஷன் க்ஷரன் என்றும், காரண உபாதியுடன் கூடிய புருஷன் அக்ஷரன் என்றும், இவை இரணடும் அறற நிலையில் புருஷோத்தமன் என்றும் அழைக்கப்படுகிறது.

அழிவது அனைத்தும் க்ஷரம். அழிவனவற்றிற்கிடையில் எந்த ஒன்று அழியாது இருக்கிறதோ அது அக்ஷரம்.

பானை உடைகிறது. அது க்ஷரம். பானை உடைந்த பின்னரும் எந்த மண்ணினால் அநதப் பானை செய்யப்பட்டிருக்கிறதோ அந்த மண் எஞ்சி நிற்கிறது. அது அக்ஷரம். மண் நீரிலிருந்து தோன்றி பிரளய காலத்தில் அதிலேயே மறைகிறது. நீர் அக்னியிலிருந்து, அக்னி அல்லது நெருப்பு காற்றிலிருந்து, காற்று ஆகாயத்திலிருந்து, ஆகாசம் அஹங்காரத்திலிருநது, அஹம்காரம் மஹத் தத்துவத்திலிருந்து, மஹத் தத்துவம பிரகிருதியிலிருநது உண்டாயின. எனவே மண முதல் மஹத் தததுவம வரை அனைத்தும் க்ஷரம். பிரகிருதி அக்ஷரம்.

(தொடரும்)



# திருவேங்கடமலை வரலாற்று மாலை

**ஸ்ரீ ராமபிரான்**

இனி, திருவேங்கடமுடையான் திருக்கோவிலில் ஸீதை லக்ஷ்மணன் ஹனுமான் ஸுக்ரீவன் அங்கதன் ஆகியவர்களோடு கூடி விளங்கும் ஸ்ரீராமபிரானது வரலாறு கூறப்படும். முன்பு 'க்ருதமாலை(வைகை) யாற்றின் கரையில் திருமாலின் அவதாரமான சக்ரவர்த்தி திருமகன் விச்வம்பரருக்காக விபிஷணனுக்கு அபயமளித்த திருக்கோலத்தோடு தோன்றினான்' என்று வாஸிஷ்ட ராமாயணத்தில் கூறியபடியே, கிருதமாலையென்னும் பெயர் பெற்ற ஆற்றின் கரையில் தென்மதுரை நகரத்தின் மேற்றிசையிலுள்ள குருவித்துறையென்ற நகரில் விச்வம்பரரென்னும் மாமுனிவர் 'குரங்குகட்கு அரசனான ஸுக்ரீவனே இவ்விபீஷணனுக்கு என்னால் அபயமளிக்கப்பட்டது, இவனை அழைத்து வா' என்று கூறப்பட்டுள்ள — இராமபிரான் விபீஷணாழ்வானுக்கு அபயமளித்த சரித்திரத்தைக் கேட்டு அதில் மனம் ஈடுபடப்பெற்று அப்போதைய அந்த நிலைமையோடு கூடிய ஸ்ரீராமனை நேரே காண்பதற்காக அப்பெருமானைக் குறித்துத் தவம் செய்யுமளவில், அந்த இராமபிரான் தவமியற்றும் அம்முனிவரிடம் தயை புரிந்து அதனால் தூண்டப்பெற்றவனாய், ஒருசமயம் அவருக்குக் கனவில் — தானும் லக்ஷ்மணனுமாகிய இருவரும் வில்லைத் தாங்கி நிற்பவராகவும், தன்னருகில் 'சுக்கிரீவன விபிஷணனுக்கு எல்லாச் செய்தியையும் விண்ணப்பித்து வந்து அரசர் பெருமானான இராமபிரானே உமது விருப்பத்தின்படியே செய்யும் என்று கூறிக் கைகூப்பி நின்றான்' என்று கூறியபடி ஸுக்ரீவமகாராஜன் ஸ்ரீவிபீஷணனிடம் சொல்லவேண்டிய — அச்சமயத்துக்குத் தக்க வார்த்தையை விண்ணப்பம் செய்துவிட்டு, 'அடியேன் விண்ணப்பிக்கவேண்டியதை விண்ணப்பம் செய்துவிட்டேன், இனி நீர் நினைத்தபடியே செய்யத்தக்கீர்' என்று சொல்லிக் கூப்பிய கையனாய் அருகில் நின்று ஸேவிப்பனாகவும், ஹனுமான் விபீஷணனைச் சேர்த்துக் கொள்வதற்காக 'இதுவே தக்க இடம், இதுவே தகுந்த காலமுமாகும்' என்றிது முதலான வார்த்தைகளைப் பேசிக்கொண்டு தமதருகில் நிற்பவனாகவும், அங்கதன் 'பேரொளி படைத்த வாலி தநயன் அதோ விபீஷணன் கிட்டிநின்றானென்று அப்போது கையைத்தூக்கி ஆகாசத்தில் காட்டியவனாய் நின்றான்' என்றபடியே மனக்கவலை தீர்ந்த விபீஷணனைத் தன் கைவிரலால் குறித்துக் காட்டிக்கொண்டு நிற்பவனாகவும் வாஸிஷ்ட ராமாயணத்தில் கூறிய இப்படிப்பட்ட வேஷத்தோடு கூடிய இவர்களனைவரையும் நேரே நன்றாகக் காட்டியருளினான்.

இங்ஙனம் கனவில் தாம் விரும்பியதற்கு ஏற்ற நிலைமையோடும் பரிஜனங்களோடும் கூடிய தன்னைத் தன் கருணையினால் இராமபிரான் காட்ட, அப்படியே கண்டு விழித்தெழுந்த அவ் விச்வம்பரமுனிவர் அவ்விடத்திலேயே அப்பரிஜனங்களோடு கூடிய இராமபிரானை அர்ச்சை (பஞ்சலோஹ பிம்ப) வடிவத்தில் நிருமாணம் செய்வித்துப் (பிரதிஷ்டை செய்வித்துப்) பூஜை செய்து கொண்டுவந்து தமது விருப்பம் நிறைவேறப் பெற்றார்.

அது முதலாக அவ்விடத்தில் முற்கூறிய பரிவாரங்களுடன் கூட இராமபிரான் ஆராதிக்கப்பட்டுவருமளவில், ஒருகால் அக்குருவித்துறை நகரில் பெரியதொரு கலஹம் (சண்டை) உண்டாக, அப்பெருமான் ஒரு பக்தனுக்கு, அப்பா என்னை இப்போது என் பரிவாரத்துடன் திருவேங்கடமலைக்குக் கொண்டு சேர்த்துவிடு என்று கனவில் கூற, அவன் அப்பெருமானைப் பரிவாரத்தோடு எழுந்தருளப்பண்ணுவித்துக் கொண்டு சென்று, திருவேங்கடமலையடிவாரத்தில் அடிப்புளியமரத்தின் கீழுள்ள குண்டுக்கல்லின் பக்கத்தில் ஸ்ரீராமாயணத்தைச் சொல்லியும் கேட்டும் நற்போதுபோக்கி வருமவர்களும் அப்போதுதான் விபீஷணனுக்கு அபயந்தரும் கெட்டத்தைப்பற்றி ஆராய்ந்துகொண்டிருப்பவர்களுமான திருமலைநம்பிகள் இராமானுசமுனிவர் ஆகிய இருவரின் பக்கத்தில் எழுந்தருளப்பண்ணினான். அவ்விருவரும் தாம் எதிர்

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியார்,
சிரோமணி–வித்வான், திருப்பதி.

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

பாராமல் எழுந்தருளிய ஸ்ரீராம லக்ஷ்மண ஸுக்ரீவ ஹநுமத் அங்கதமூர்த்திகள் விபீஷணனுக்கு அபயமளித்த நிலைமைக்குரிய வேஷத்தோடு உயிருப்பதனைக் கண்டும் அவர்கள் இங்குத் திடீரென்று எழுந்தருளுவதற்குக் காரணமான சரித்திரமனைத்தையும் கேட்டும் மிக மகிழ்ச்சியடைந்து, 'இவர்கள் முன்பு எங்ஙனம் விபீஷணனை அபயம் தந்து அருள்செய்தனரோ, அங்ஙனமே, அவ்விபீஷணனுபயதான கெட்டத்தைப் படித்து ஆராய்ந்துகொண்டிருக்கும் நமக்கும் அபயமளிக்க விருப்பம் கொண்டே அச்சமயத்துக்குத் தக்க வேஷத்துடன் கூடி எழுந்தருளினர் என்று சொல்லி, முன்பு ஸ்ரீவிபீஷணனுக்கு அபயமளித்த இந்த ஸ்ரீராமபிரானுக்கு இராவண பவனத்திலிருந்து எழுந்தருளின ஸ்ரீஜானகிப்பிராட்டியோடு எப்படிச் சேர்த்தி உண்டாயிற்றோ அப்படியே இங்கும் (அர்ச்சையுருவமான) ஸ்ரீஜானகிப்பிராட்டியோடு சேர்த்தியை உண்டாக்கவேணுமென்று நினைத்து, ஸ்ரீஜானகீ (ஸீதா)தேவியை நல்லதோர் நாளில் நல்லதொரு வேளையில் அர்ச்சைவடிவமாக அவதரிப்பித்து, முற்கூறிய இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீவைகாநஸாகமத்தில் விதித்த முறைப்படியே ஸம்ப்ரோக்ஷணம் செய்வித்து, ஸ்ரீஸீதைப்பிராட்டிக்கும் ஸ்ரீராமபிரானுக்கும் திருக்கல்யாண மகோத்ஸவத்தையும் நடத்திவைத்து; அவர்களுக்கு நித்தியபூஜை மேன்மேலும் வளர்ந்து வருவதற்காக மங்களாசாஸனம் செய்து, 'கடைந்த திருப்பாற்கடலில் பள்ளிகொண்டு, காலநேமியென்னும் அசுரனை வென்று, இராமபிரானாய் அவதரித்து மனங்கலங்கிய வாலிசகோதரனாகிய சுக்கிரீவனுக்கு உதவவந்து ஒன்றொடொன்று நெருங்கிய (மரா) மரங்கள் ஏழையும் அம்பினால் துளைத்துத் திருவேங்கடமலை சென்றடைந்த திருமாலாகிய தலைவனின் திருவடிகளையே எந்நாளும் அடைந்து உய்வுபெறுவீர்களாக' என்னும் இப்பொருள்கொண்ட—திருமழிசையாழ்வார் அருளிய திருச்சந்த விருத்தமென்று பெயர்பெற்ற பாசுரத்தொகுதியில் எண்பத்தோராம் பாசுரத்தை மெய்யாக்க விரும்பியவர்களாய், திருவேங்கடமலையில் ஸ்ரீனிவாஸப்பெருமாளுடைய திருக்கோவிலிலேயே அவர்களறுவரையும் எழுந்தருளப்பண்ணி, ஆண்டுதோறும் ஸ்ரீராமநவமிக்கு அடுத்த நாளில் இந்த ஸ்ரீஸீதாராமர்களுக்குத் திருக்கல்யாணோத்ஸவம் நடத்தும்படி நியமனம்செய்து அவர்கள் அனைவர்க்கும் நித்யபூஜையையும் நடத்திவைத்தருளினார்கள்.

**ஸ்ரீவராகப் பெருமாள்**

இனி ஸ்ரீவராகப்பெருமாளுடைய வரலாறு கூறப்படும். பாத்மபுராணப்பகுதியில் உள்ள 29 எண் குறித்த அத்தியாயத்தில்—பொற்குடங்களிலிருந்து தொடர்ந்து இடைவிடாமல் பெருகுகின்ற பசும்பாலால் அரசன் புற்றினுடைய துவாரத்தின் உட்பகுதியை அபிஷேகம் செய்யத் தொடங்கினான். அங்ஙனம் செய்துகொண்டிருக்கையில் அப் புற்றின் உட்பகுதியிலிருந்து பூஜிக்கத்தக்க வராகவுருக்கொண்ட பெருமாள் தோன்றினார்—என்றிது முதலாகக் கூறப்பட்ட பெருமையையுடையவரும், இங்ஙனமே பெரும்பாலும் வேங்கடாசலமாகாத்மியத்தைக் கூறுகின்ற புராணப்பகுதிகள் அனைத்திலும் கூறப்பட்டு மிகவும் பிரசித்தமான வைபவமுடையவரும் ஸ்ரீஸ்வாமிபுஷ்கரிணியின் மேற்குக் கரையில் விளங்குமவருமான இவ்வராகப்பெருமாள் ஸ்ரீஸ்ரீநிவாஸ பகவானுக்கு முன்னமே திருவேங்கடமலைக்கு வந்து எழுந்தருளியிருந்தபோதிலும், ஸ்ரீநிவாஸப்பெருமானுக்கே இதற்கு முன்பு பிரமன் முதலியோர்களால் பிரபலமாக பிரம்மோத்ஸவம் முதலியன நடத்திவைக்கப்பட்டமை புராணங்களில் அறியப்படுவதனாலும், இப்போதும் அப்பெருமானுக்கே பிரம்மோத்ஸவாதிகள் செய்விக்கப்பட்டு வருவதனாலும் அவருடைய உத்ஸவங்களைக் குறைத்தல் தகாது. மேலும் ஸ்ரீவைகாநஸானந்தஸம்ஹிதையில் — பலிஸாதிக்கப்படுகிற ஒருவீதியின் நடுவில் (உள்ள இரு தேவதைகளில்) ஒரு தேவதையை பலிஹோமமில்லாமல் அமுக்கியமாகப் பூஜிக்கவேண்டும். உத்ஸவம் முதலியவை செய்யக்கூடாது— என்றுள்ள வசனத்தினால், ஒரு தலத்தில் பலிபூஜைநடைபெறும் ஒரு (நான்கு) வீதிநடுவில் எழுந்தருளியுள்ள பெருமான்கள் இருவர்க்கும் ஸமமான முக்கியத்துவம் கொடுத்து பலிபீடார்ச்சனம் நித்யஹோமம் பிரம்மோத்ஸவம் முதலியன செய்யக்கூடாதென்றும் இருவரில் ஒருவரை அமுக்கியராக ஆக்கி பலிஹோமங்களில்லாமல் நித்தியபூஜை மட்டும் செய்யவேண்டுமென்றும் அறியப்படுகிறது. ஆகையால் இவ்வராகப்பிரானுக்கு பலிபீடபூஜை நித்யஹோமம் பிரம்மோத்ஸவம் இவையின்றி முச்சந்திகளிலும் பூஜை மட்டும் செய்யப்படவேண்டும்.

அங்ஙனம் வராகப்பெருமானுக்குச் செய்யப்படுகின்ற பூஜையும், ப்ராஹ்மபுராணம் எட்டாமத்தியாயத்தில்—மிகவுயர்ந்த இடமான ஸத்யலோகத்தில் இருக்கும் பிதாமஹர் (நான்முகக் கடவுள்) அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்போது 'இப்பகுதி வராகதீர்த்தமென்னும் பெயரால் பிரசித்தியடையப் போகிறது. இங்கு வருமவர்கள் இதன்கண் நீராடாமல் அசுத்தராய் வராகப்பெருமானை வணங்கக் கூடாது. வராகரை வணங்குவதற்கு முன்பு ஸ்ரீநிவாஸப்பெருமானை வணங்குதல் கூடாது. வராகப்பெருமானைச் சேவிப்பதற்கு முன்பு தன்னைச் சேவித்தால் ஸ்ரீனிவாஸப்பெருமான் திருப்தியடையமாட்டான்' என்று கூறி இப்படி ஒரு

யதியை ஏற்படுத்தினர். பின்பு அவர் ஸ்ரீநிவாஸப்பெருமானைச் சேவித்துப் பல துதிகளால் துதித்து அவன் திருப்பாதங்களைப் பிடித்துக் கொண்டு, திருமாலே உமக்குப் பூஜை நடப்பதற்கு முன்பாகவே அடியேன் ஸ்தாபித்த வராகப்பெருமாளுக்குத் திருமஞ்சனம் சந்தன புஷ்ப நைவேதய தானம் தரிசனம் முதலிய பூஜை நடக்கவேண்டும்' என்று வரம் வேண்டினர். திருவின் மணவாளனை ஸ்ரீநிவாஸன் அப்படியே ஆகக்கடவதென்று வரமளித்து அதை அவ்வாறே நடத்தி வைத்தான் — என்று வசனமுள்ளதனாலும், வராகவுருவம் தரித்த திருமால் அவ்வேடனைக் குறித்து – ஸ்ரீநிவாஸனுடைய தீர்த்தத்தில் (ஸ்வாமி புஷ்கரிணியில்) நீராடுவதற்கு முன்பு எனது தீர்த்தத்தில் நீராடவேண்டும். ஸ்ரீனிவாஸனது விமானத்தைச் சேவிப்பதற்கு முன்பு எனது விமானத்தைச் சேவிக்கவேண்டும்— என்று தாமே கூறினர். அதுமுதல் அத்தீர்த்தம் முதலில் நீராடத்தக்கதாக ஆயிற்று என்று வசனமுள்ளதனாலும்,

பவிஷ்யோத்தரபுராணம் ஐந்தாமத்தியாயத்தில் ஸ்ரீவராகப்பெருமாளுக்கும் ஸ்ரீனிவாஸப்பெருமாளுக்கும் நடந்த ஸம்பாஷணையில் ஸ்ரீனிவாஸப்பெருமாள் வராகரைக் குறித்து 'பூதேவிமணவாளனே இம்மலையில் எனது பாக்கியத்தால் உம்மைக் காணலுற்றேன். இங்கேயே வசிக்கவேண்டுமென்ற திடமான எண்ணம் எனக்கு உள்ளது. கலியும் முடியும்வரையில் எனக்கு வசிக்க இடம் தரவேண்டுகிறேன" என்று விண்ணப்பிக்க, அதற்கு வராகர் — 'என்னிடமிருந்து விலை கொடுத்து வசிக்க இடத்தைப் பெற்றுக்கொள்ளும்' என்று கூற, அது கேட்ட ஸ்ரீநிவாஸன் 'உம்மையே எல்லோரும் முன்பு வணங்குவர். ஆதலால் திருமஞ்சனம் உமக்கே முன்பு நடைபெறும். நைவேத்தியமும் உமக்கே முதலில் நடக்கும். இதையே (இப்படி நான் நடத்தி வைப்பதையே) உயர்ந்த விலையாகத் தருகிறேன். கருணாநிதியான பூதேவி நாதனே நான் கொடுப்பதை ஏற்றுக் கொள்ளும். அப்பனே மாதவர் தயாநிதியே இது உயர்ந்த விலைப் பொருளாகும். ஆகையால் என்னிடம் தயை புரியவேண்டுகிறேன்' என்று மிக இனிமையாகப் பேச, அது கேட்ட வ்ராகபகவான் திருமகள்நாதனாய் வசிக்க இடங்கேட்கும் ஸ்ரீனிவாஸபகவானுக்கு நூறடியளவுள்ள ஸ்தலத்தைக் கொடுத்தார்—என்று வசனமுள்ளதனாலும், ஸ்ரீநிவாஸப்பெருமாளுக்குப் பூஜை நடப்பதற்கு முன்பே செய்யப்படவேண்டும். யாத்திரை செய்யுமவர்களும் முன்பே வராகதீர்த்தத்தில் நீராடி வராகவிமானத்தைச் சேவிக்கவேண்டும் என்று வரையறுத்து, அப்போது வராகப்பெருமாளுக்கு ஓர் உத்ஸவமூர்த்தியை நிருமாணம் செய்வித்துப் பிரதிஷ்டை செய்வித்து, அவருக்கு ஒரு நாள் அத்யயனோத்ஸவம் நடப்பிக்க வேண்டுமென்றும், ஸ்வாமிபுஷ்கரிணியின் கரையில் ஐப்பசிமாதத் திருவோண நன்னாளில் தோன்றிய திருமேனியை உடைய திருவேங்கடமலை வராகப்பெருமாளுக்கு வணக்கம்' என்று கூறப்பட்ட—வராகப்பெருமாள் அவதரித்த நக்ஷத்திரமாகிய ஐப்பசித் திருவோணத்திலும் ஸ்ரீவராகஜயந்தியன்றும் சிறப்பாக உத்ஸவம் நடத்திவைக்கவேண்டுமென்றும பகவத்ராமானுஜமுனிவர் நியமனம் செய்தருளினர்.

**பாரபத்யதரர்**

இனித் திருவேங்கடமுடையான் திருக்கோவிலில் கைங்கரியங்கள் அனைத்தையும் நிறைவேற்றிவைக்கும் முக்கிய அதிகாரியாகிய—பாரபத்யமென்னும் அதிகாரஸ்தானத்தை வகிக்கும் ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஒருவகை மரியாதையை நடத்தி வைத்த சரித்திரம் கூறப்படும். திருவேங்கடமுடையானது அபிமானத்திற்கு உட்பட்ட 'ஸ்ரீபதபுரி' என்ற திருப்பதிக்ஷேத்திரத்தில், கிரிமிகண்டசோழனது கொடுமை காரணமாக ஸ்ரீசித்திரகூடநாதனை ஸ்ரீகோவிந்தராஜப்பெருமாள் எழுந்தருளித் திருவேங்கடவனது திவ்யமான ஐச்வரியத்தினால் தம்முடைய ஸகலமான உத்ஸவபோகங்களின் ஸாம்ராஜ்யத்தை (மிக உயர்ந்ததொரு .நிலைமையை) அனுபவித்துக்கொண்டு வருகின்ற நாளில், திருவேங்கடமலையும் திருப்பதிநகரமும் ஒரே திவ்யதேசமென்று (ராமானுஜர்) நியமித்தபின்பு, திருவேங்கடமலையில் பெருமான்திருக்கோவிலில் தினந்தோறும் இரவில் திருப்பள்ளிக்கட்டிலில் பெருமாளுக்குச் சயனபோகம் முடியுந் தறுவாயில், அர்ச்சகர் ஸ்ரீசடகோபனை (பெருமாள்பாதுகைகளை) குடை சாமரம் முதலிய உப்சாரங்களுடன் வாசலுக்கெதிரில் உள்ள கிருஷ்ண மண்டபத்துக்கு எழுந்தருளச்செய்து கொண்டு வந்து தெற்கு முகமாக நின்றுகொண்டு, 'பகவானுடைய அருள் (உம்மிடம்)வெள்ளமிடுகிறது (=அருளிப்பாடு)வாரீர், திருவேங்கடமுடையான் திருச்சித்திரகூடமுடையான் ஆகிய எம்பெருமான்கள் இருவரின் ஸர்வகைங்கர்ய பாரத்தையும் வகிக்குமவரே ஸ்ரீவேங்கடாத்ரி திவ்யஸம்ஸ்தானத்தின் ஸகலகார்யங்களையும் நிர்வஹிக்குமவரே விஷ்வக்ஸேனரே' என்று பரிசாரகர் விருதுகூறி அழைக்க, 'இவ்வடியேன் நான் (இங்கு) உள்ளேன்' (=நாயன் தே)என்று விண்ணப்பித்துக்கொண்டு கிட்டிவந்த–திருவேங்கடமுடையான் திருக்கோவிலில் பாரபத்யாதிகாரம் வகிக்கும் ஸ்ரீவைஷ்ணவனுக்குப் பெருமாளுடைய சேஷவஸ்த்ரத்தை (உடுத்துக் களைந்த பீதகவாடையை) தலையில் சுற்றிக் கட்டி ஸ்ரீசடகோபனை ஸாதிப்பதாகிற (தலையில் வைப்பதாகிற) மரியாதையைச் செய்யவேண்டும். அதற்குப் பிறகுதான் கோவிற்கதவுகளைச் சாத்தி முத்திரையிட்டுக் கோவிற்காரியங்களைப் பூர்த்தி செய்யவேண்டும் என்று இக்கட்டளையையும் பகவத்ராமானுஜமுனிவர் செய்தருளினர்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸ மாலையில் ஐந்தாம் கொத்து முற்றும். (தொடரும்)

# நவராத்திரி விழா

**முன்னுரை:**

நம் நாட்டு மக்களால் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படும் விழாக்களில் நவராத்திரி விழாவும் ஒன்று. இவ்விழா புரட்டாசி மாத அமாவாசைக்கு மறுநாள் முதல் ஒன்பது நாட்கள் கொண்டாடப்படும் பெருவிழாவாகும். ஒன்பது நாட்களும் வீட்டில் பொம்மைக் கொலு வைப்பதும் வழக்கம். பல கோவில்களில் பராசக்தியின் ஒன்பது அருஞ்செயல்களை விளக்கும் அலங்காரங்களைச் செய்து பூஜை செய்வர். லக்ஷ்மி என்றும், ஸரஸ்வதி என்றும், பார்வதி என்றும், மூன்று மூர்த்தியாக நிற்பது பராசக்தியேயாம். ஒவ்வொரு மனிதனும் நல்வாழ்வு வாழ அறிவு, செல்வம், தைரியம் ஆகிய மூன்றும் தேவை. இம்மூன்று செல்வங்களையும் அருள தேவியை வேண்டுவதே நவராத்திரி பூஜையின் நோக்கமாகும். ஏழை எளிய மக்கள் நவராத்திரி விழாவின் இறுதியிலே வரும் கலைமகள் விழாவை மட்டும் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். அன்றைய தினம் தன் உழைப்பிற்கு உறுதுணையாக உள்ள கருவிகளை வைத்துப் பூசிக்கின்றனர். இனி மகாகவி பாரதியார் பாடியுள்ள "நவராத்திரிப் பாட்டு" என்னும் தலைப்பில் நவராத்திரி விழாவின் சிறப்பினைக் காண்போம்.

**நவராத்திரிப் பாட்டு:**

மகாகவி பாரதியார் நவராத்திரிப் பாட்டு என்னும் தலைப்பில் பாட்டில் பராசக்தி தான் வாணியாகவும், ஸ்ரீ தேவியாகவும், பார்வதியாகவும் கற்பிக்கப்பட்டு நவராத்திரி விழாவின் தாயகிகளாகக் கொள்ளப்பட்டனர் என்று விளக்கியுள்ளார். கலைமகளைப் பற்றிப் பாடியுள்ள பாட்டில் பாரதியார் பாடியிருப்பதாவது:

வஞ்சமற்ற தொழில் புரிந்துண்டு
வாழும் மாந்தர் குலதெய்வமாவாள்
வெஞ்சமர்க்குயிராகிய கொல்லர்
விந்தையோர்ந்திடு சிற்பியர் தச்சர்
மிஞ்ச நற்பொருள் வாணிகம் செய்வோர்
வீரமன்னர் பின் வேதியர் யாரும்
தஞ்சவென்று வணங்கிடுந்தெய்வம்
தரணிமீது அறிவு ஆகியதெய்வம்
கைவருந்தி உழைப்பவர் தெய்வம்
கவிஞர் தெய்வம், கடவுளர் தெய்வம்

கலை மகளானவள் கொல்லர், தச்சர், சிற்பியர் மன்னர், வேதியர் ஆகிய யாவரும் வணங்கத் தக்க தெய்வமாமாவாள். மேலும் உழைக்கின்ற பாட்டாளி மக்களின் தெய்வமாகவும் விளங்கி வருகின்றாள் எனவும் மேற்கூறிய பாடலில் பாடியுள்ளார். உழைப்பாளிகள் கலைமகள் விழாவை "ஆயுத பூஜை" என்ற பெயரில் இன்றும் கொண்டாடி வருகின்றனரல்லவா? மேலும் அனைத்து மக்களுக்கும் நன்மை தருமாறு கோரி பாரதியார் வணங்குகின்றார். அப்பாடலாவது,

" வீடுதோறும் கலையின் விளக்கம்
வீதிதோறும் இரண்டொருபள்ளி
நாடுமுற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்கள் எங்கும் பலபலபள்ளி "

என்ற வரிகளில் அறிவொளியைப் பரப்ப எங்கும் பள்ளிகளை நிறுவ வேண்டுமென்றும் அதன் மூலம் கலைமகள் அருள் அனைவருக்கும் கிடைக்குமெனவும் பாடியுள்ளார். மேலும்,

" கேடு தீர்க்கும் அமுதமென் அன்னை
கேண்மை கொள்ள வழியிவை
காண்க"

என்ற பாடலடிகளால் கலைமகள் நமக்கு வரும் கேடுகளைத் தீர்க்க அறிவொளியைப் பெற பள்ளிகளைத் திறப்பதேயாகும் என்பதும் இதனால் அறிய முடிகின்றது. நாடு முழுவதிலும் உள்ள ஊர்களெங்கும் நகரங்களெங்கும் பல பள்ளிகளைத் திறந்து கலைமகள் விழாவைக் கொண்டாட வேண்டுமென்பதே பாரதியாரின் பெரு விருப்பம். மேலும்,

" தேடு கல்வியில்லாத ஊரைத்
தீயினுக்கிரையாக மடுத்தல்"

என்ற பாடலடியில் கல்விக் கூடமில்லாத ஊரைத் தீயிட்டு அழித்தல் பாவமில்லை என்கிறார் பாரதியார். ஔவையார், "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாமெ"ன்று பாடினார். இவற்றிலிருந்து ஆலயமும், பள்ளியும் எல்லா ஊர்களுக்கும் தேவையென்பது புலனாகின்றதல்லவா? கல்வியைப் பெண் தெய்வமாகப் போற்றும் இந்த நாட்டிலா பெண்கள் கல்வி கற்பதை வெறுப்பது? எல்லா பெண்களும் கல்வி பெற்று கலைமகள் அருள் பெற வேண்டுமென்பதே பாரதியாரின் அவா.

**முடிவுரை:**

நவராத்திரி விழாவில் நாமனைவரும் பராசக்தியை வணங்க வேண்டும். மகிஷாசுரன் என்ற அசுரனைக் கொன்று பராசக்திதேவர்களைக் காத்ததாகப் புராணங்கள் கூறும். தீமை அகன்று எங்கும் இன்பம் பெறுக நாமனைவரும்சக்தியைவணங்கி அருள் பெற்று இன்பமுடன் வாழ்வோமாக!



புலவர், திருமதி. எம். தியாகவல்லி,
வேலூர்.

# நான் அறிந்த திருமலை ரகசியம்

உலகப் புகழ்பெற்ற இந்த வேங்கடவனின் உண்டி ஆண்டுக்குப் பலகோடி ரூபாய்களை பெற்றுத் தருகின்றது. இந்த கோயிலைப் போல பிற எந்த கோயிலிலாவது அன்றாடம் இருமுறை உண்டியைத் திறந்து காணிக்கைகளை எண்ணுகின்றார்களா என்பது ஐயமே! அப்பா! எத்தனை வகை காணிக்கைகள். முடி காணிகை, கரன்ஸி நோட்டு, தங்கம், வெள்ளி, பித்தளை, செம்பு, வைரம், வைடூரியம், லாட்டரி டிக்கெட்டு, பாண்டு பத்திரங்கள், உருவங்கள் பதித்த தகடுகள், அரிசி, தானியங்கள், துணிகள், முதலிய அவரவர்கள் வேண்டுதலுக்கொப்ப நிறைந்துள்ளன.

குறிப்பாக இவருடைய காணிக்கைகளிலேயே மேம்பட்டதாகக் கருதப்படுவது முடிகொடுக்கும் காணிக்கையாகும். திருப்பதி மொட்டை உலகறிந்த விஷயமாகும். ஆண்டு தோறும் பல லக்ஷ ரூபாய்கள் இந்த முடி காணிக்கை மூலம் வேங்கடவனுக்குக் கிடைக்கப் பெறுகின்றது. மேலும் இந்த முடிகள் வெளிநாடுகளுக்கும் அனுப்பப்படடு அன்னிய செலாவணியையும் பெருக்க உதவுகின்றது. இந்த முடி பிரார்த்தனை செலுத்துமிடத்தை திருமலை திருப்பதி தேவஸ்தான கலியாண கட்டா என்ற பெயரில் ஒருசங்கமாக மிகுந்த பக்தியுடன் நடத்தி வருகின்றனர். வேங்கடவனின் வழிபாட்டில் மிகவும் மேம்பட்ட காணிக்கையாக ஒரு முக்கிய அங்கமாக இந்த முடி கொடுக்கும் காணிக்கை கருதப்படுகின்றது. அதேபோல கோயிலினுள் அன்றாடம் நடக்கும் உற்சவங்கள் எவ்வளவு செய்வித்தாலும், ஸ்வாமி தரிசனம் முடிந்து வெளிவரும் போது அவரது உண்டியலில் காணிக்கை இட்டாலே வழிபாடு நிறைவு பெற்றதாகத் தோன்றுகிறது. எனவே உண்டியில் காணிக்கையிடுவதே அனைத்திலும் சிறந்த செயலாகக் கருதப்படுகின்றது.

சிறிது காலத்திற்கு முன்பு இவ்வாலயம் ஹத்திராம்ஜி என்ற மடத்தார் மூலம் நிருவாகிக்கப்பட்டு வந்தது. பகவான் பாலாஜி மீது அதிதமான பக்தி பூண்டு அவரைத் தன நண்பனைப்போல பாவித்து அவருடன் அனுதினம் இரவில் பகடை ஆடிய ஹத்திராமஜியின் மடம்தான் பூர்வம் வேங்கடவனுக்கு பெரும் தொண்டாற்றியும், செயலாற்றியும், வந்துள்ளது. மடத்தினுள்ளே பாலாஜி ஸ்வாமியுடன் பகவான் பகடைஆடுவது போன்ற படங்களும், அவரும் பகவானும் பகடை ஆடிய இடமாகக் கருதப்படும் மெத்தைகளும் தூய்மையாய் இன்னும் பாதுகாக்கப்படுகின்றன. சீதா, ராமர், லக்ஷ்மணன், ஹநுமான், கிருஷ்ணர் போன்றவர்களுக்கு பஞ்சலோக விக்ரஹ ஆராதனைகள் நடக்கின்றன. இந்த மஹந்த் மடத்தில் ஸ்ரீராமநவமி, தீபாவளி போன்ற உத்ஸவங்கள் வைபவமாகக் கொண்டாடப்படுகின்றன. ஆலயங்களுக்கே சிறப்பு அம்சமான உரியடித்திருவிழாவும் ஆண்டுதோறும இங்குச் சிறப்பு அம்சமாகக் கொண்டாடப்படுகின்றது. அன்றைய தினம் பெருமாள இங்கு எழுந்தருளுவார. இங்கு சிறப்புப் பிரஸாதமாக வழங்கப்படும மேவா என்கிற பஞ்சாமிர்தம் மிகவும் ருசியானது.

இங்கும் இந்த பாலாஜி மடத்தைச் சார்ந்தவர்கள் அனைவரும் வடநாட்டவர்களாகவே காணப்படுகின்றார்கள். மேலும் நான்கு மாடவீதிகளிலும் இருக்கும் ராதா கிருஷ்ண மடம், மூல மடம் போன்றவற்றில் கூட வடதேசத்தைச் சார்ந்தவர்களாகவும் அந்த மடங்களில் இருக்கும் விக்ரஹங்கள் கூட வடநாட்டில் இருப்பது போல சலவைக்கல் சிலைகளாயிருப்பதும் அவர்கள் பூஜா ஆராதன முறைகளும் வடநாட்டை ஒத்தே இருப்பதும் குறிப்பிடத் தக்கது. சில காலங்கள் முன் வரை இக்கோயில் நிர்வாகம் முழுவதும் இந்த ''மஹந்த்'' என்றழைக்கப்படுபவர்களால்தான் நடத்தப்பட்டதாம்.

காலப்போக்கில் இவ்வாலயம் திருமலை திருப்பதி தேவஸ்தான அறநிலையத்துறை வசமான பிறகு பல நிர்வாக அதிகாரிகளின் கடும்உழைப்பின் பேரில் இன்று இந்த வேங்கடவன் ஆலயம் ஒரு உலகப்புகழ்பெற்ற ஆலயத்தின் அந்தஸ்தை எட்டி விட்டது.

கடவுளின் அருள் உலகத்தார் அனைவருக்கும் சமமே என்றுணர்த்தும் வணணம் திருமலை வேங்கடவன் ஆலயம் அமெரிக்காவிலுள்ள பிட்ஸ்பர்க் நகர மத்தியில் குன்றின் மேல் அமர்த்தப்பட்டு அங்குள்ள மக்களுக்கும் தரிசனமளிக்கின்றார். அதே சமயம் ஏழையின் குரல் எங்கிருந்து எப்பொழுது கேட்டாலும் வேங்கடவன் அதற்குபதில் கொடுப்பான்.

''ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி'' எப்பொழுதும் அவனை ஸ்மரித்துக் கொண்டேயிருப்பேன் என்ற லட்சோப லட்சம் பக்தர்கள் கூற்று செவிப்பறையில் மோதிக் கொண்டேயிருக்கின்றது.

விநா வேங்கடேசம ந நாதோ நநாத :
ஸதா வேஙகடேசம ஸ்மராமி ஸ்மராமி ॥



திரு. எஸ். சந்திர மௌலி
*திருப்பதி-517 501.*

# செவ்வாய்

செவ்வாய்க்கு 'குஜன், நிலமகன், அங்காரகன் பூமிஸுதன், செம்மீன், மங்களன...' எனப்பல பெயர்கள் உணடு. எல்லா கிரஹங்களும் தான் அமர்ந்த இடத்திலிருந்து ஏழாம் பார்வையோடு மேலும் இரண்டு இடங்களை நோக்கக் கூடிய சிறப்பான விசேஷ த்ருஷ்டிபலம் நவக்ரஹங்களில் மூன்று க்ரஹங்களுக்கு மட்டுமே ஸர்வேச்வரனால் அருளப்பட்டிருக்கிறது. அந்த மூன்றில் ஒன்று செவ்வாய். "சதுஸ் ஸப்தாஷ்டமோகுஜ:" என்பர். அதாவது தானிருந்த இடத்திலிருந்து நான்கு, ஏழு, எட்டு ஆகிய மூன்று பார்வைகளைக் கடாக்ஷிக்க வல்லவன் குஜன் என்ற மண் மகனாகிய செவ்வாய்.

திருமணம் என்று வரும்போது முதலாவதாகக் கேட்கும் கேள்வியே "ஜாதகருக்கு செவ்வாய் தோஷம் இருக்கிறதா" என்பதாகும். பெண்ணுக்கோ பிள்ளைக்கோ இருவரில் ஒருவருககு செவ்வாய் தோஷமிருநது மற்றவருக்கு இல்லையெனில் அவர்களுக்குக் கல்யாணம் செய்யக்கூடாது என்கிறது சாஸ்த்ரம். இந்த செவ்வாய் தோஷம் பற்றிய ஸ்திரமான அபிப்ராயம், ஜோதிடர்களிலேயே சிலருக்குக் கிடையாது என்பதைவிட சரியான விவரம் தெரியாது என்று கூடச் சொலலலாம். லக்னத்துக்கோ, சந்திரன் நின்ற இடத்துக்கோ, சூரியன் அமர்ந்த ராசிக்கோ, அல்லது சுக்ரன் உட்கார்ந்த இடத்துக்கோ, 2, 4, 7, 8, 12ல் செவ்வாய் இருப்பதுவே அங்காரகதோஷம் எனப்படும. இநதக கருத்துககு முரணாக, லக்னத்திலிருந்து மட்டுமே செவவாய் உள்ள இடத்தைப் பார்த்து தோஷ நிர்ணயம் செய்ய வேண்டும் என்று சிலர் சொல்வர். ஆனால் அப்படிச் சொல்வது சரியில்லை என்று, மாந்த்ரீக சிகாமணியும், ஜோதிஷ சாம்ராட்டுமாகிய, அமரர் ஸ்ரீ. உ. வே. நடாதூர் வரகவி வேங்கடாச்சார்ய ஸ்வாமிகளின் 'க்ரஹதோஷ சாந்தி' என்ற கிரநதம் கூறுகிறது.

ஜாதகப்படி, மேலே குறிப்பிட்ட 2, 4, 7, 8, 12ஆம் இடங்களில் எங்காவது செவ்வாய் இருநதால்கூட அவன் அமர்ந்த இடம் மேஷம், விருச்சிகம், மகரம், மிதுனம ஆகிய நான்கில் ஏதாவது ஓர் இடமாக அமைந்தாலும்; அல்லது சூரியன், சந்திரன, குரு, சுக்ரன், சனி ஆகிய ஐந்து கிரஹங்களில் ஏதாவது ஒன்றுடன் சேர்ந்திருந்தாலும் அல்லது இவர்களில் யாரேனும் ஒருவர் பார்வை செவ்வாய்க்குக் கிடைத்தாலும குஜ தோஷம் கிடையாது என்று பிரமாணிக்கிறது, 'ப்ரத்யக்ஷ ஜ்யோதிஷம்' என்ற நூல். பொதுவாக 'சனி' க்ரஹத்துக்கு மனிதர்களிடையே எப்படி ஒரு பயம் இருககிறதோ அது மாதிரியான அளவுக்கு இந்த 'செவ்வாய்' குறிததும் ஓர் அச்சம் பரவலாக நிலவுகிறது. ஜாதக ரீதியாக ஒருவருக்கு செவ்வாய் சரியாக அமையவில்லை என்றால், அவரைப் பார்த்து 'ஐயோ பாவம்' என்று நாம் இரக்கப்படுவதைத் தவிர வேறு உதவி செய்தாலும் அது அவருக்குத் தக்காது என்றே கூற வேணடும்.

வாழ்நாள் முழுவதும் ஒருவர் கடன்காரராக வாழ்ந்து, கடனைத் தீர்க்க முடியாமலேயே இறந்தாலும்; ஒருவர் எநத வைதயம் செய்தாலும், தீர்த்துக கொள்ள முடியாத அளவுக்கு மாறி மாறி நோய்களின் பிடிப்பில் சிக்கிக்கொண்டு, நோயாளியாகவே இருக்கிறார் என்றாலும், எப்பொழுது பார்த்தாலும் ஒருவருக்கு பகைவர்களினால் தொந்தரவு விளைந்து கொண்டிருந்தாலும் அதற்குப் பின்னணியில் மூலகாரணமாக விளங்குவது இந்த செவ்வாய் சரஹத்தின் செயலே என்பது அவர்களின ஜாதகத்தைப் பார்ததாலேயே விளங்கும்

கடன், பிணி, பகை போன்ற தொல்லைகளிலிருந்து ஒருவர் விடுபட்டு 'ஐஸ்வர்ய வந்தனாக' விளங்க வேண்டுமென்றால், செவ்வாய் க்ரஹ சாநதி ஹோமம் செயது, க்ரஹ ப்ரீதி செய்து, ஒவ்வொரு நாளும் செவ்வாய் ஹோரை வரும் ஏதாவது ஒரு மணி நேரம், மன ஒருமைப்பாட்டுடன் அங்காரக காயத்ரியையும், ஸுப்ரஹ்மண்ய ஷடாக்ஷர மஹா மந்திரத்தையும் ஏழு வருட காலத்துக்கு ஜபித்து, வைத்தீஸ்வரன கோயில் என்ற க்ஷேத்ரத்துக்கு ஜப முடிவு நாளில் வந்து, அங்கு குஜ க்ரஹஸ்மரணையுடன் அபிஷேக ஆராதனை செய்து, பாரத் வாஜ கோத்ரத்தில், மிருக சீர்ஷ நக்ஷத்ரத்தில் பிறந்த அந்தணரொருவருக்கு அமுது செய்வித்து, தானமளித்தால் மந்த்ரசித்தி உணடாகி, செவ்வாய் க்ரஹக்கோளாறினால் ஒருவருக்கு ஏற்பட்ட குலதெய்வ கோபம், தாயாதி சாபம், ரத்த தோஷம், ருண ரோக சத்ரு அவஸ்தை, மிருக, பக்ஷி வதைகளினால் ஏற்பட்டுவிட்ட பாபம், பூத ப்ரேத பைசாசப் பீடிப்பினால்

ஜோதிஷ விசாரதை
வி பிச்சையம்மாள்
பாண்டிச்சேரி.

அற நிலையத்துறை சட்டத்தின கீழ் பதிவாக்கப்பட்ட கோயில்களுக்குக் குடைகள் தேவைப்படின், அவற்றை (இரண்டு குடைகள்) தி. தி. தே. 50/- தள்ளுபடியில் ரூ. 600/-க்கு கொடுத்து வந்தது. அத்தொகை 1-4-84 முதல் ரூ. 650/- ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

உண்டான மனோபீதி, கால்கை வலிப்பு போன்றவை சாந்தியாகும். 'செவ்வாய்' பாரத்வாஜ கோத்ரத்தைச சேர்ந்தவர். தக்ஷனது யாகத்தைத் துவம்சம் செய்த வீரபத்ரரின மறு உருவே 'செவ்வாய்' என்றும் புராணக் குறிப்பு ஒன்று கூறுகிறது. அசுபக்ரஹங்களில் செவ்வாயும் ஒன்று என்பர்.

புறநானூற்றில் கூட செவ்வாய் பற்றிய குறிப்பு வருகிறது. முததுக்களில, செந்நீரோட்டமுடைய வகையைச் சேர்ந்த முத்து உண்டு. இந்தச் செந்நீர் முத்தை 'அங்காரகன்' என்பர் என, சிலப்பதிகாரத்துக்கு எழுதிய உரையில் அடியார்க்கு நல்லார் கூறுகிறார். சித்தாந்த சேகரம என்ற நூலில் செவ்வாய் பற்றிய விவரம் காணக்கிடைககின்றது. இந்த செவ்வாயை பண்டைய ரோமர்கள் 'மார்ஸ்' என்ற பெயரில், போர்க் கடவுளாகக் கொண்டாடித் துதித்து வணங்கி வழிபட்டு வந்தனர் என்பதற்கும் வரலாற்றுக் குறிப்புகள உண்டு. ஜாதக ரீதியாக ஒருவருக்கு இந்த செவ்வாய் ஜீவன ஸ்தானாதிபதியாகவோ, அல்லது ஜீவன ஸ்தானத்தைப் பார்த்தோ, பலத்துடன் இருந்தால் அந்த ஜாதகர் போலீஸ் உயர் அதிகாரியாகவோ, ராணுவ வீரராகவோ, கராத்தே, மற்போர்க் கலைகளில் சிறந்த புலமையும் புகழும் கொண்டவாராகவோ, பெரிய நிலச் சுவான் தாரராகவோ, பேச்சாற்றலிற் சிறந்த வககீலாகவோ விளங்குவர். அசாதாரணமான மனத் துணிச்சலையும், கேட்டார் பிணிக்கும் மேடைப் பேச்சுத் திறனும் கொண்டவர்கள் செவ்வாயின் அனுக்ரஹத்துக்குப் பாத்ரமானவர்களே. செவ்வாய்க்கு என்று தனித்த வழிபாட்டுத் திருத்தலமாகக கூறப்படுபவை திருச்சிறுகுடியும், புள்ளிருக்கு வேளூர் எனப்படும் வைத்தீஸ்வரன் கோயிலுமே ஆகும்.

---

### தி. தி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ.6-50 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | | | | —நித்ய அர்ச்சனை (வருடத்திற்கு ரூ. 150/- செலுத்தும் கிருஹஸ்தர்கள் பங்கேற்கலாம்) |
| 6-15 | ,, | 6-45 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-45 | ,, | 1-00 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 1-00 | ,, | 1-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 1-30 | ,, | 7-00 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, | —சுத்தி, இரவு மணி |
| 7-30 | ,, | 8-30 | ,, | —ஸர்வதரிசனம் |
| 8-30 | ,, | 9-00 | ,, | —ஏகாந்தசேவை |

காலை

### வெள்ளிக்கிழமைகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | —ஸர்வ தரிசனம் |
| 4-30 | ,, | 5-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50 (நானகு நபர்கள் அனுமதிக்கப்படுவர்) |
| 5-00 | ,, | 5-15 | ,, | —நித்ய அர்ச்சனை |
| 5-15 | ,, | 5-45 | ,, | —சுத்தி, முதல் மணி |
| 5-45 | ,, | 7-00 | ,, | —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, | —சாலிம்பு |
| 7-30 | ,, | 9-00 | ,, | —தாயாருக்கு அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அலங்காரம், 2வது மணி |
| 10-00 | ,, | 8-00 | இரவு | —ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 8-00 | ,, | —கண்ணாடி மண்டபத்தில் ஊஞ்சல் சேவை. (ரூ. 150/-செலுத்தி பங்கேற்கும் இரு நபர்களுக்கு சுமார் 5 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கம் வழங்கப்படும்) |
| 8-00 | ,, | 8-30 | ,, | —இரவு மணி |
| 8-30 | ,, | 9-00 | ,, | —ஏகாந்தசேவை |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

**II ஆர்ஜிதம்**

| | | | |
|---|---|---|---|
| (அ) | பொங்கல் ¼ அளவு | | ரூ. 55/- |
| (ஆ) | புளியோரை | ,, | ரூ. 50/- |
| (இ) | தத்யோதனம் | ,, | ரூ. 40/- |
| (ஈ) | கேஸரிபாத் | ,, | ரூ. 85/- |
| (உ) | சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 65/- |
| (ஊ) | தோசைப்படி | ,, | ரூ. 35/- |
| (எ) | ஸாகரபாத் | ,, | ரூ. 90/- |
| (ஏ) | ஸீரா | ,, | ரூ.155/- |

**III சேவைகள்**

| | | |
|---|---|---|
| (அ) | நித்ய அர்ச்சனை (ஆண்டொன்றுக்கு) | ரூ. 150/- |
| (ஆ) | ஸகஸ்ரநாமஅர்ச்சனை | ரூ. 6-50 |
| (இ) | அர்ச்சனை | ரூ. 1-00 |
| (ஈ) | ஹாரத்தி | ரூ. 0-50 |
| (உ) | பூராபிஷேகம் (வெள்ளிக்கிழமையில் மட்டும்) | ரூ 100-00 |
| (ஊ) | ஊஞ்சல் சேவை (வெள்ளிக்கிழமை மாலையில் மட்டும்) | ரூ.150-00 |
| (எ) | திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஏ) | யானை வாகனம் | ரூ. 32-00 |

* திருப்பதியிலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை. (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை (அமந்த்ரணோறசவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமேஅனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி

8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன,

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நித்ய கட்டளை கைங்கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கானஏற்பாடுகள்.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை 2-வதுமணி, பலி, சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு7 -00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு10-00 வரை : **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங்கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன;

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

#  பீஷ்மரின் தனிப்பெருமை 

ஊருக்கெல்லாம் தர்மோபதேசம் செயது பிரசித்தி பெற்ற இவர் தாமே தர்ம மார்க்கத்தைக கடைபிடிககவில்லை.

अनाश्रमी नतिष्ठेत्तु दिनमेकमपि द्विज।

என்பது தர்ம சாஸ்திரத்தின கட்டளை. "ஒரு ஆச்ரமத்திலும இல்லாமல் (அனுச்ரமியாக) ஒரு நாள் கூட இருக்கக் கூடாது'' என்பது இதன் கருத்து. ஆனால் இவர் ஆயுள் முழுதும் அனுச்ரமியாகவே இருநது விட்டார். அதாவது பரமமசர்யாச்ரமம் முடிந்து விட்டபின் க்ருஹஸ்தாச்ரமத்தில் பிரவேசிக்கவே இல்லை. ஸன்யாஸாச்ரமம்-வான ப்ரஸ்தாச்ரமம் எனனும் மற்ற இரண்டு ஆச்ரமங்களிலும் சேரவில்லை. மற்றும் சிறந்த வேதாந்தியாகவும் - ப்ரம்மோபாஸகராகவும் இருந்தார். சாஸ்திரகாரர்களுக்கு இவருடைய விஷயமும் பெரிய சர்ச்சைக்கிடமாகிவிட்டது.

இவர் ஏன் இப்படி இருந்தார்? வேறு வழியில்லை. திக்கற்றவராகி விட்டார். யாரும் பெண் கொடுப்பாரில்லை. அதுதான் காரணம். மகாபாரதத்தில் ஆச்வமேதிக பர்வத்தில் ஐந்தாவது அததியாயத்தில், மூன்று ச்லோகங்களில் இவர் விஷயம் பேசப்பட்டிருக்கிறது:

तवे वाङ्गिरसः पुत्रौ व्रत तुल्यो बभूवतुः ।
बृहस्पतिर्बृहत्तेजाः संवर्तश्च तपोधनः ।।

அப்படியே அங்கிரஸ் மகரிஷியின் குமாரர்களிருவரும் வ்ரதங்களில் சரிசமானமாக இருந்தனர். பெரும் தேஜஸ்ஸுடைய ப்ருஹஸ்பதி ஒருவர். தவத்தையே செல்வமாகக் கொண்ட ஸம்வர்த்தர் மற்றொருவர்.

तावपि स्पर्धिनौ राजन् ! पृथगास्तां परस्परम्।
बृहस्पतिश्च संवर्तं बाधतेस्म पुनः पुनः ।।

அரசே! அவ்விருவரும் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு தனித் தனியாகவே இருந்து வந்தனர். மூததவரான ப்ருஹஸ்பதி, தம்பியை அடிக்கடி பலவாறாகவும துன்புறுத்தி வநதார்.

स बाध्यमानः सततं भ्रात्राज्येष्ठेन भारत ।
अर्थानुत्सृज्य दिग्वासाः वनवास मरोचयत् ।।

மூத்த ஸகோதரரால் ஸர்வ காலமும் ஸம்வர்த்தர் துன்புறுத்தப்பட்டு வந்தார். அவரால் இதை சகிக்க முடியவில்லை. தனது செல்வமனைத்தையும உதறித்தள்ளிவிட்டு, உடுக்கத்துணி கூட இல்லாமல் ஆடு மாடுகள போல் காட்டிலேயே வஸித்து வந்தார்.

ப்ராதாக்களிருவரும் மஹா விவேகிகள்! ஏன் இப்படிப்பட்ட மனஸ்தாபம? பணத்தாசைதான காரணம். இருவரும புரோகிதர்கள். பெரும் செல்வந்தர்களான அரசர்களெல்லாம் இவர்களது புரோகித உரிமைககுட்பட்டவர்கள். மூத்தவரான ப்ருஹஸ்பதி அந்த இடங்களையெல்லாம் தானே பிடித்துக கொண்டுவிட்டார். தம்பியை அணுகவொட்டாமல் சாணக்ய தந்திரம் புரிந்தார். ஸம்வர்த்தருக்கு அவ்வளவு சாதுர்யம் இல்லை. அதனால் எங்கும் இவருக்கு வரவேற்பில்லை. புரோகித வருமானமெல்லாம மூத்தவருக்கே சென்று குவிந்தது. இவருககு உண்ண உணவில்லை. உடுக்கத் துணியில்லை. இருகக இடமில்லை. அவமானம் தாங்க முடியவில்லை. யார் கண்ணிலும் படாமல் எங்கேயாவது ஓடி மறைந்துவிடத் துணிந்தார். திகம்பரராகவே காட்டுக்கு ஓடி விட்டார். இராமாயணக் கதையில் வாலிக்கும் ஸுக்ரீவனுக்கும் சண்டை. தம்பியான ஸுக்ரீவனை மூத்தவனாகிய வாலி அடித்து விரட்டி விட்டான், அரையில் உடுத்த ஒரே துணியுடன்! இந்த ஸம்வர்த்தருக்கு அது கூட இல்லை. இப்படிப்பட்ட கேவலமான நிலையில் தள்ளப்பட்டார். சிறந்த ப்ரம்ம ஜ்ஞானிகள இப்படியே தான் ஐஹிக ஸுகங்களை அனுதரிப்பார்கள். ப்ரஸித்த ப்ரம்ம ஜ்ஞானியான ஜடபரதர், சுகபரப்ரம்மம, நம்மாழ்வார் இத்யாதிகளைப்போல் ஸம்வர்த்தரும் இருந்தார். உலகத்தார் என்ன நினைத்தால் - சொன்னால் - என்ன? அகத்திலே பகவதனுபவம் வற்றாத இனிய ஊற்றாக ஓடிக்கொண்டிருக்கிறது. அந்த ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொணடிருக்கும் மகான்களுக்குப் பசி-தாகம்-ஏது? சாதாரணமான தர்ம சாஸ்திரங்கள் இவர்களைத் தனது வரம்பிற்குள் அடக்கி வைக்க முடியாது.

---

நாவல்பாககம ஸ்ரீ தேவநாதாச்சாரியர்,
*திருப்பதி.*

---

இப்படியாக, பீஷ்மருக்குத்தோள் திண்டியான-சிற்றின்பத்தை அலக்ஷ்யமாக வென்றவர்களான-மகான்கள் பலரையும் அனுபவித்தோம். இவர்கள் அனுஷ்டித்த காரியங்கள் சாஸ்திர ஸம்மதமானவைதான் என்பதை பூர்வ மீமாம்ஸாஸூத்ரகாரரான ஜைமினி மகரிஷி தமது நூலில் முதல் அத்தியாயத்தில் மூன்றும் பாதத்தில் சிஷ்டாசார ப்ராமாண்ய விசாரத்தில் நிரூபித்திருக்கிறார்.

यद्यद्य चरति श्रेष्ठः तत्तदेवे तरोजनः ।
सयत् प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ।।

என்கிற ரீதியில் இவர்களுடைய அனுஷ்டானங்கள் ஏனைய மக்களுக்கும் ஆதாரமாக அமைந்தவை. ஆத

# தசாவதாரத் திருவேங்கடத்தான்

திரு. வா. ர. ஸ்ரீனிவாஸ ராகவன் எம். எஸ்.ஸி -குரோம்பேட்டை.

வேதமவையாவையும் விரிநீர் மூழ்கிட, உருவ
மீதமுடல் மீனாக மீணடே அவை மீட்ட
நாதன் நற்கதிதானவன் நாவினிக்குந் திருநாமம்
கீதமென ஒலிக்கக் கண்டது திருவேங்கடத்தே.

கனியமுதம் கடையக் கடலுள் நாட்டிய வெற்பு
ஒளிய, ஓராமையிரு ஓங்கியெடுத்துநிறுத்திய
விளியிலா வெற்பனவன் வினையறுக்குஞ்சங்கம்
வளியிடையே ஒலிக்கக் கண்டது திருவேங்கடத்தே

மண்முதலா உலகங்கள் மாந்தரிடை தங்கக்கால்
கண்வனையா காருருவமாய் கழிகொம்பில் நிறுத்தல்
பண்ணிய பெருமானவன் பேரச்சம்பழித் திகிரி
ஒண்சுடராகச் சுழலக் கணடது திருவேங்கடத்தே.

சொல்லித்துவளா சூழ்த்த இன்னலிற் சிறுவனுக்காய்
புல்லனுடல் கிழிக்கப் பெருங்காலினிற் புகுந்துபிளந்த
வல்லரியவன், வாழ்வுகாட்டும், வனப்படிகாட்டும் வலக்கை
ஒல்கா நிலையாயிருக்கக் கண்டது திருவேங்கடத்தே.

அசுராதிபன்முன் அணிசிறுவுருவாய் அடிநாடிபின்
விசும்பினூடேயுயர்நத உருவாய் அவனையளநத
பசுகாக்கும் பவளனவன் பககலணைக்கும் பணிக்கை
தசும்பன்ன மிளிரக் கண்டது திருவேங்கடத்தே.

முற்றைதன் தந்தைமொழி மடுத்து முனிவனுருவாய்
விற்கைவீரர் வெகுண்டு ஓடிடச் செய்தபாருலக
பற்றையறுக்கும பரநதாமனவன் பசுங்கழற்பாதம்
பொற்றாமரையாய் பொலியக் கணடது திருவேங்கடத்தே.

பத்துமா சிரமுடையோன் பாரினிலிழிந்தாழ
இத்துமா தரணியிதனுள் இறை மானிடவுருவமதாய்
வித்துமா யுயிர்க்காயுதித்த விண்ணவன் கண்ணேக்கு
கொத்துமா சோலை குளிரக் கண்டது திருவேங்கடத்தே.

முன்பிறந்த மாதவன் முகில் வண்ணனேடு மூண்டு
வன்னரக்கர் கூட்டமதை அழித்திட்ட உருவமவன்
இன்துணையாள், அலராள் இரும் இணையணி மார்பு
பொன்னணியாய் ஒளிரக கணடது திருவேங்கடத்தே.

உலகமவையாவுமுணட உறவாளன் ஆயர்தம்
குலமுதித்த கோபாலன், கொல்லுமரக்கியுயிரை
விலக்கிட்ட விண்ணமுதனவன் விந்தைபுகல்பவளவாய்
நிலமிடை நின்றொளிரக் கண்டது திருவேங்கடத்தே.

நலிந்திடும் நல்லுலகம் நற்கருமங்கள் விடுத்ததுகண
மலிந்திடும் மாப்பிணிகள் மாந்தர் மனதிடையழிந்து
மெலிந்திட, வரும்வண்ணம் மாணிக்கமேனியுடலாய்
கலியினில் நிற்கும் கண்ணனைக் கண்டது திருவேங்கடத்தே.

லால் இதை அலக்ஷயம் பண்ணக் கூடாது. அதனல் அரும்பாடுபட்டு ஸூத்ரகாரரும், பின்புள்ள வ்யாக்யானகாரர்களும் இதில் உள்ள பொருத்தத்தைப் பரக்க நிரூபித்துள்ளனர்.

சாஸ்த்திர விரோதமாகவே நனருகத் தெரியும் காரியங்கள் பலவற றையும் மஹான்கள் பலர் செய்திருப் பதையும் இவர்கள் உதாஹரித்து விசாரம் செய்திருக்கிறுர்கள். அவர்களுடைய தபஸ சக்தி மிகப் பெரிது. ஒரு ஸந்தர்பத்தில் அவர்கள் அப்படிச செய்திருந்தாலும், பிறகு அதன் விளைவுகளைத் தவ வலிமையால் ஈடு செய்து கொள்வர். அத்தகைய சகதியில்லாத பிற்காலத்தவர், தப்பு பண்ணுவதற்கு மட்டும் அதை ஆதாரமாகக் கொள்ளக் கூடாது என்பதையும் விளக்கியுள்ளனர்.

''யானைக்குப் பசி அதிகம் ஆலமரத்தின் பெரிய கிளையை அலக்ஷ்யமாக முறித்து அபபடியே தினனும ஜீர்ணமும் செய்து கொளளும. அதைப் பார்த்து நாமும் அபபடிச் செய்யலாமா?'' என்கிறுர் குமாரிலபட்டர்.

பூர்வ மீமாம்ஸா சாஸ்த்ரம் யாகங்களைப் பண்ணும் வகையையே விசாரிக்க ஏறபட்டது. அதனல் பீஷ்மர் யாகம் அனுஷ்டித்த விஷயத்தை உதாஹரித்து ''அது சரிதான்'' எனனும் முடிவு அதில் கூறப்பட்டது.

உத்தர மீமாம்ஸா சாஸ்திரம, ப்ரம்மோபாஸனத்தையே முக்கியமாய் விவரிக்க ஏற்பட்டது. அதனுல பீஷ்மர் முதலானேர் ''அனுச்ரமி'' யாகவே ப்ரமம வித்யா நிஷ்டர்களாக இருநததில் பொருத்த முள்ளமையை இது விளக்கிக் காட்டுகிறது. ப்ரமம ஸூத்ரம்-மூன்றுமத்தியாயம், நாலாம் பாதம்-ஒன்பதாமதிகரணம்.

१) अन्त राचापितु तद्वृष्टेः ।
२) अपि समर्यते

३) विद्वेषानु प्रहश्च
४) अतस्वितरत् ज्या योलिङ्गाच्च ।

என்னும் நான்கு ஸூத்ரங்களைக் கொண்டது. "விதுராதிகரணம்" (विधुराधि करणम्) என்று பெயர் பெற்றது. அது பீஷ்மரைப் போன்ற மகான்களின் அனுஷ்டானம் சரியானதே என்பதை ஸ்தாபிப்பதற்காகவே தோன்றியது பீஷ்மரைப் போலவே சிற்றின்பத்தை அறவே வெறுத்து ஆயுள் முழுதும் தளராத உறுதியுடன் இருந்தவர்கள் மற்றும் பலர் பிற்காலத்திலும் இருந்திருக்கிறார்கள். ஆதிசங்கரர் இப்படிப் பட்டவரேதான். அவருடைய பீடத்தில் அன்று முதல் தொடர்ச்சியாக இன்றளவும் வீற்றிருக்கும் ஜகதாசார்யர்கள் யாவரும் இக்காலத்து பீஷ்மர்களேயாவார்கள். இன்றும் என்றும் ப்ரத்யக்ஷ பீஷ்மர்களாக இந்த ஜகதாசார்யர்கள் காட்சியளித்து வருகின்றனர்.

இவ்விஷயம் அனைவருக்கும் தெரியும். இப்படி அதிகமாக ப்ரஸித்தி பெறாத ஒரு "பீஷ்மரும்" இருந்திருக்கிறார். அவர் ஸ்ரீபகவத் இராமானுஜருடைய காலத்திலிருந்தவர். ஸ்ரீ ராமானுஜரும் இவரும் சிறிய தாயார்-பெரிய தாயார்-பிள்ளைகள். அதனால் ஒன்று விட்ட சகோதரர்களானவர்கள். இராமானுஜருடைய திருவடிகளையே ஆச்ரயித்து அவருடைய அந்தரங்க சிஷ்யரானார் மற்றவர். இருவருமே சந்நியாசாச்ரமத்தை மேற்கொண்டனர். ஆனால் அதன் காரணம் வேறு.

" சற்றேனும் தாறுமாறுமிருப்பாளாகில்
கூறாமல் சன்னியாசங்கொள்"

என்னும் ரீதியில், தன் மனைவி ஒற்றுமையாக இல்லாத காரணத்தால் சன்னியாசங்கொண்டார் இராமானுஜர்.

மற்றவர் அப்படியில்லை. இவருடைய ஆசார்யரான இராமானுஜரே இவரைச் சன்னியாசங்கொள்ளுமாறு பணித்தார். அப்படியே நடந்தது. இதை இனி விளக்குவோம். இவர் முக்கியமான ஸ்ரீ வைஷ்ணவாசார்யராதலால் இவருடைய சரித்திரம் "குரு பரம்பரை"யில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. அதிலுள்ள சில வாக்கியங்கள்:

"கோவிந்தப் பெருமாள் திருத்தாயார் வந்து, கோவிந்தப் பெருமாளே! உம்முடைய தேவிகள் பக்வமானாள்" என்ன, இவரும், "ஆகில் அம்மா! இருட்டும் தனியுமாயிருக்கும் அவகாசம் பார்த்து அவளை வரக்காட்டும்" என்ன, அவரும் பகுநாள் அவகாசம் பார்த்து ஒரு நாளும் அவகாசம் காணாதே உடையவருக்கு விண்ணப்பஞ் செய்ய, அவரும் இவரையழைத்து, "கோவிந்தப் பெருமாளே! நம்மாணை. ஒரு ருது காலத்திலே நீர் போம்" என்றருளிச்செய்து போகவிட்டருள கோவிந்தப் பெருமாளும் தேவிகளுக்காக இராமுற்ற அந்தர்யாமியை அனுபவிப்பித்துத் தத்குண சேஷ்டிதங்களைக் கீர்த்தித் தருளிப் போக விட, இவர் திருத்தாயா விடிவோரை வந்து "இங்ஙன் செய்யலாமோ? என்ன, இவரும் 'அந்தர்யாமி ப்ரகாசித்திருக்க அழிச்சாட்டப் போமோ? என்ன, இச் செய்தியை அருகிலிருந்தவர்கள் எம்பெருமானாருடனே விண்ணப்பம் செய்ய, இவரும் திருவடிகளை ஸேவித்து நின்றவளவிலே, அவரும், "இராமுற்ற என் செய்தீர்?' என்று மந்தஸ்மிதம் செய்து கேட்டருள, இவரும், "அந்தர்யாமி ப்ரகாசிக்கையாலே இதுக்கு ஏகாந்தம் கண்டிலேன்" என்று விண்ணப்பம் செய்ய, உடையவரும், "வாரீர் கோவிந்தப் பெருமாளே! உமக்கு விஷயாந்தர விரக்தி இத்தனையுண்டாகில், 'அனாச்ரமீ நதிஷ்டேத்' என்கிற சாஸ்திர வசனம் நீரறியீரோ?' என்ன, இவரும் "அடியேனுக்கு ஸந்யாஸாச்ரமம் ப்ரஸாதித் தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்ய, உடையவரும் திரிதண்டகாஷாயாதிகளை ப்ரஸாதித்துத் தம் திருநாமத்தையே ப்ரஸாதித் தருள, இவரும், "ஸ்ரீபாதச்சாயா பன்னராயிருக்குமவனுக்குப் பொறுக்கும்படி அருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து திருவடிகளிலே தண்டனிட்டுக் கிடக்க, உடையவரும், அத்திரு நாமத்தை ப்ரத்யாஹரித்து, "எம்பார்" என்று திருநாமம் சாத்தியருளி முடிபிடி எடுத்து க்ருபை செய்தருளினர்" என்பனவாம்.

பல நூறாண்டுகளுக்கு முற்பட்ட மணி ப்ரவாள நடை இது. ஸம்ஸ்க்ருதமும் தமிழும் கலந்தது. இரு மொழிகளிலும்—ஸம்ப்ரதாயத்திலும்— அனுபோக முள்ளவர்களுக்கே இது நன்கு விளங்கும். அதனால் இதன் கருத்துச் சுருக்கத்தை எழுதுகிறோம்.

'கோவிந்தப் பெருமாள்' என்பது இவருடைய பூர்வாச்ரமத்தில் வழங்கின திருநாமம். இவரே ஸந்யாஸாச்ரமத்தை மேற்கொண்டபொழுது "எம்பார்" என்னும் திருநாமம் பெற்றார்.

இவர் முறைப்படி உபநயனம் பண்ணப் பெற்று, ப்ரம்மசர்யாச்ரமத்தை முடித்துக் கொண்டார். உரிய காலத்தில் இவருக்குத் திருமணமும் நடந்தது. அக்காலத்திய வழக்கப்படி ருதுவாகாத சிறு வயதினளான பெண்ணே இவருக்கு மனைவியானாள். காலக்கிரமத்தில் அவள் ருதுவானாள். சாந்தி முகூர்த்தம் ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால்??? "பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது!" எல்லா உயிர்களிலும் உள்ளுறைபவன் எம்பெருமான். அதனால் 'அந்தர்யாமீ' எனப்படுவான். அவனை உள்ளபடியே உணர்ந்து அனவரதமும் அனுபவிப்பவர் கோவிந்தப் பெருமாள். இந்த அனுபவத்துக்குத் துணையாக ஒரு ஸஹதர்மசாரிணி கிடைத்ததை உவகையுடன் வரவேற்றார். அவளுக்கும் இந்த விலக்ஷணமான பகவதனுபவத்தைக் கற்பிக்க வாரம்பித்தார். இரவும் கழிந்தது,

பொழுதும் புலர்ந்தது. இந்த விசித்ரமான நிகழ்ச்சி அருகிலுள்ளாரனைவருக்கும் தெரிந்தது. இவருடைய தாயார் இதை ஸ்ரீராமானுஜரிடம் சொன்னாள். அவர் இவரை அழைத்து இது தர்மஹாநியாமென்றும்-உலகத்தாரைப் போல நடந்து கொள்ளும்படியும் பணித்தார்.

ஆனால்? மாறுதல் யாதுமில்லை! க்ருஹஸ்தனாக இருந்து கொண்டு, அதற்கேற்பட்ட நடைமுறைகளை மேற்கொள்ள மறுப்பதனால் இந்த ஆச்ரமம் 'போலி' யாகிவிடும் என பது அவருக்கு எடுத்தோதப்பட்டது. "என் மனம் எம்பெருமானையே நாடுகின்றது. இல்வாழ்க்கை பற்றிய நினைவே எனக்கு வெறுப்பாக இருக்கிறது" என்றார் கோவிந்தப் பெருமாள். என்ன செய்வது? வேறு வழியில்லை. இப்படி "அனாச்ரமி"யாக ஒரு நாள் கூட இருப்பது தகாது. ஆதலால் ஸந்யாஸாச்ரமத்தை ஏற்குமாறு பணித்தார் ஸ்ரீராமானுஜர். அப்படியே நடந்தது. "எம்பார்" என்னும் திருநாமத்துடன் துறவியானார் "கோவிந்தப் பெருமாள்".

மனைவியை மணந்து கொண்டு அவளுடன் யாகங்களையும் அனுஷ்டித்த பீஷ்மர் க்ருஹஸ்தர் தானே! இவரை 'அனாச்ரமீ' என்று எப்படிச் சொல்லலாம்? என்னும் கேள்விக்கு இப்போது பதிலிறுப்போம். இதில் இரு விதமான கருத்துள்ளது.

1. குமாரிலபட்டர் - யாகங்களை க்ருஹஸ்தன்தான பண்ணலாம். பீஷ்மர் யாகம் பண்ணினபடியால் க்ருஹஸ்தாச்ரமியேதான்.

2. பகவத் ராமானுஜர் - மனைவியிடம் மக்கட்பேறு பெறுவது க்ருஹஸ்தாச்ரமத்தின முக்கியமான விஷயம். அஃதில்லாமையால் பீஷ்மர் 'அனாச்ரமியே' தான்.

ஒரே விஷயத்தை இருவரும் வெவ்வேறு கோணத்திலிருந்து நோக்குகின்றனர்; அவ்வளவுதான்.

இவ்வாறாக பீஷ்மரின் தனிப்பெருமை, இதிகாஸ புராணங்களிலும், ப்ரம்ம ஸூத்ரத்திலும் பரக்கப் பேசப்படுகின்றது. ப்ரசித்தி பெற்ற மகாபாரத யுத்தம் 18 நாட்களில் நடந்து முடிந்தது. அதில் சரி பாதி- ஒன்பது நாள் - பீஷ்மரே தலைமை தாங்கி துரியோதனன் கட்சியை வெற்றிகரமாக நடத்தினார். இது இவருடைய தனிப் பெருமை. நாடெங்குமுள்ள சிறந்த வில்லாளிகள் அத்தனை பேரும் குழுமியிருந்தும் இவரை வீழ்த்த முடியவில்லை. வேறு வழியின்றி ஏதோ தந்திரம் செய்தனர். இவர் வில்லைக் கீழே போட்டு விட்டு போர்க்களத்தில் வீரசயனத்தில கிடந்தார்.

இம்மட்டோ? கிருஷ்ண பரமாத்மாவின் ப்ரதிஜ்ஞையைப் பொய்யாக்கினதும் பீஷ்மரின் தனிப் பெருமையே. 'ஆயுத மெடுப்பதில்லை' என்று ப்ரதிஜ்ஞை செய்தார் கிருஷ்ணன். பீஷ்மருக்கும் அர்ஜுனனுக்கும் போர் மூண்டது. அர்ஜுனன் களைத்துப் போய் விட்டான். அவனுடைய தேரோட்டியான கிருஷ்ண பரமாத்மா தனது ப்ரதிஜ்ஞையைக் கைவிட்டார். சக்ராயுதத்தைக் கையிலேந்தி, தேரிலிருந்து குதித்து பீஷ்மர் மேல் பாய்ந்தார். பீஷ்மர் போரை நிறுத்தி விட்டார். அர்ஜுனன் பிழைத்தான். வெற்றி யாருக்கு? இதிலென்ன சந்தேகம்? பரம பக்தரான பீஷ்மரிடம் தோற்றதில்தான் கிருஷ்ணனுக்கு எத்தனை ஆனந்தம்? சக்கரமும் கையுமாக அவரை ஸேவித்த பீஷ்மருக்கு மட்டும் அந்த ஆனந்தம் அளவிடக் கூடியதாகவா இருந்தது? அடியவர்களிடம் தோற்பதில் தான எம்பெருமானுக்கு ஆனந்தம்.

இதெல்லாம் ஒருபுறமிருக்கட்டும் விதுராதிகரணத்தில் உதாகரிக்கப்பட்ட மகான்கள் பலருள்ளும் பீஷ்மருடைய தனிப் பெருமையை ப்ரத்யக்ஷமாகக் காண்கிறோம். புத்த பகவானுக்கு 'மாரஜித்' என்றொரு பெயர். 'காமனை வென்றவர்' என்பது இதன் பொருள். சிறந்த கட்டழகிகள் பலரும் சூழ்ந்து கொண்டு அவருடைய வைராக்யத்தைக் குலைக்கப் பெரு முயற்சி செய்து பார்த்தனர். முடியவில்லை. புத்தர் சொன்னார்: "அழகிகளே! உங்களுக்கும் ஒரு நாள் கிழத்தனம் வருமல்லவா? அப்போது உங்கள் உடலமைப்பு இருக்கக் கூடிய நிலையை நான் இப்போதே அகக்கண்ணால் பார்க்கிறேன். அருவருப்பு தாங்க முடியவில்லை" என்று. அபபடிப்பட்டவருங்கூட இல்வாழ்க்கையில் சிறிது காலம் இன்புற்ற பின்னரே துறவு பூண்டார். வாசக்நவீ-ஸம்வர்த்தர் - ஹனுமான் போன்றவர்கள் பிறவி முதலாகவே சிற்றினபத்தை வெறுத்துத் தள்ளி விட்டவர்கள். பீஷ்மருடைய நிலைமை இவற்றைக் காட்டிலும் முற்றிலும் மாறுபட்டது. இல்வாழ்க்கையில் தோய்ந்து இன்புற்றிருக்க வேண்டியதற்கான அவசியமும்-சாத்தியக் கூறுகளும் நிறைந்திருந்த நிலையில், தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக, வியக்கத்தக்க முறையில் அதை அறவே வெறுத்துத் தள்ளினார் இவர்! இஃதொன்றே பீஷ்மரின் தனிப் பெருமை. வேதவ்யாஸர் ஐந்தாம் வேதமென ப்ரசித்தி பெற்ற மகா பாரதத்தில்;

"स्त्री सहस्रैः परिवृतं समग्राङ्ग मरोगिणम् ।
ऋते शान्तनवाद्भीष्मान्नप श्याम्यूर्ध्वरेत
सम् ॥"

என்னும் ச்லோகத்தில் இந்தக் கருத்தையே விவரிக்கிறார "ஆயிரக் கணக்கான அழகிகளால் சூழப்பட்டவர். ஊனமில்லாத உடலமைப்புள்வர். நோவு - நொடியில்லாதவர். இவ்வளவிலும் "சிற்றின்பத்தை அறவே துறந்த மஹா புருஷன்-சந்தனு மகாராஜனுடைய தவப்புதல்வரான பீஷ்மரொருவரே தான. வேறொருவரை நான் கண்டதில்லை" என்பது மேற்படி ச்லோகத்தின் கருத்து.

"பீஷ்மரின் தனிப் பெருமையை இப்படியே அனுபவித்துக் கொண்டே போனால் இதுவும் ஒரு 'குட்டி' மகா பாரதமாகிவிடும். இவ்வளவில் நிறுத்தி உத்தம புத்திரனை அவருக்கு 'அஞ்சலி' செய்து நிறம் பெறுவோம். ○

# திருமுறைச் செல்வங்கள்

சிவ பரம்பொருளை முழு முதற் கடவுளாகக் கொண்டிலங்கும் சைவ சமயம், தொன்மை சிறப்புடைய ஒரு சமயமாகும். மக்களுக்கு நல்வழி காட்டி அவர்களை உய்விக்கும் ஆற்றல் பெற்ற இச்சைவ சமயத்தின் பெருமையை விளக்கும் முறையில்,

"சைவத்தின் மேல்சமயம் வேறிலை
அதிற் சார் சிவமாம்
தெய்வத்தின்மேல் தெய்வம் இல்..."

எனவரும் சைவ எல்லப்பநாவலரின் அருள்வாக்கு அமைந்திருப்பதைக் காணலாம்.

சைவ சமயத்தைச் சார்ந்த அருளாளர்கள் சிவபரம்பொருளை வாழ்த்தியும் சைவ சமய தத்துவ கோட்பாடுகளை விளக்கியும் எண்ணிறந்த நூல்கள் செய்துள்ளனர். இவற்றுள் சிவபரம்பொருளை வாழ்த்துவதாக அமைந்த நூல்கள் தோத்திர நூல்கள் எனவும் சைவ சமயக் கோட்பாடுகளை விளக்கும் நூல்கள் சாத்திர நூல்கள் எனவும்கூறப்படும். சாத்திர நூல்களில் பதினன்கு சாத்திர நூல்களும் தோத்திர நூல்களில் பன்னிரு திருமுறை நூல்களும் மிகவும் சீரும், சிறப்பும் பெற்றவையாகும். இத்தகைய தோத்திர சாத்திரச் செல்வங்களுள் இறைவன் சிவ ஞானச் செல்வமாய் மிளிர்கின்றான்.

"சொல்லும் பொருளெலாம் ஆனார்
தாமே
தோத்திரமும் ஆத்திரமும் ஆனார்
தாமே"

என்று அப்பர் பாடியுள்ள அருள் வாக்கினாலும் அறியலாம்.

**திருமுறை பெயர் வழங்கு:**

திருமுறை என்ற சொல் திரு+ முறை என்னும் சொற்களின் சேர்க்கையாகும். திருமுறை என்ற சொல்லுக்கு உயரிய சிவஞானச் செல்வத்தை மக்கள் அடைதற்கு வழி காட்டும் நூல் என்பது பொருள். முறை என்னும் சொல்லுக்கு இங்கு நூல் என்பது பொருள்.

திருமுறை என்னும் பெயர் மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்துக் கல்வெட்டுகளில்தான் முதன் முதலாகக் காணப்படுகின்றது. திருமுறை எழுதுவோர், வாசிப்போர் என சேக்கிழார் பெருமான் ஆண்டுள்ளார். மூன்றாம் குலோத்துங்கன் காலத்துக்கு முன்னர் மூவர் பாடிய தேவாரப் பாடல்களைத் திருப்பதிகம் என்ற சொல்லால் குறிப்பிட்டனர்.

**திருமுறை கண்டது:**

கொற்றவன் குடி உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய திருமுறை கண்ட புராணம் என்னும் நூல், திருமுறைகள் கண்டு தொகுக்கப் பெற்ற செய்தியை விரிவாக விளக்குகின்றது. திருநாரையூரில் பொல்லாபிள்ளையாருக்குப் பூசனை புரியும் ஆதிசைவக் குடும்பத்தைச் சார்ந்த நம்பியாண்டார் நம்பி என்னும் அருளாளரே

---


திரு. S. ராஜகோபால்,
அம்மாண்டிவிலை.


---

திருமுறைகளைத் தேடி தொகுப்பதில் திருமுறை கண்ட சோழனுக்கு உறுதுணையாக விளங்கியவர். தில்லையில் செல்லரித்துக் கிடந்த தேவார ஏடுகளை மிகவும் தொல்லைப்பட்டுச் செம்மைப்படுத்தி வரையறை செய்தவர் இவரே.

**திருமுறை கண்ட சோழன்:**

திருமுறை கண்ட சோழன் யார் என்பதில் அறிஞர்களுக்கிடையே கருத்து வேறுபாடு உண்டு.

"ஆயுமறை மொழிநம்பி யாண்டான்
நம்பி
அருள்செய்த கலித்துறையன்
தாதிதன்னைச்



கேயதிரு முறைகண்ட ராசராச
தேவர்சிவா லயதேவர் முதலாயுள்ள
ஓயகருங் கடல்புடை சூழுலகமெல்லாம்
எடுத்தினிது பாராட்டிற்று...''

என்பது திருத்தொண்டர் புராண வரலாறு. இதனுல் திருமுறை கண்ட சோழன் தஞ்சை இராஜ இராஜேச்சு வரத் திருக்கோயிலைக் கட்டிய முதலாம் இராஜ ராஜ சோழன் என்பர். இதுவே இதுவரை அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்தாகும். ஆயினும் நம்பியாண்டார் நம்பி தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில் தம்மை அன்புடன் ஆதரித்து வந்த ஆதித்தன் என்னும் பெயருடைய சோழ மன்னனைப் பாராட்டிக் கூறியிருப்பதாலும் முதலாம் இராஜ ராஜன் காலத்துக்கு முன்னரே மூவருடைய திருப்பதிகங்களும் கோயில்களில் பாடப்பட்டுள்ளன என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளமையாலும், பரகேசரி விசாயாலய சோழன் மகனுகிய முதல் ஆதித்த சோழனே திருமுறை கண்ட சோழனுவான் என்று சில அறிஞர்கள் ஆய்ந்து கண்டுள்ளார்கள்.

**வகுத்தது யார்?**

பொதுவாக திருமுறைகளை வகுத்தவர் நம்பியாண்டார் நம்பி என்று கூறுவர். திருமுறை கண்ட புராணமும் முதல் பதினெரு திருமுறைகளையும் வகுத்தவர் நம்பியாண்டார் நம்பி என்று கூறுகிறது. திருமுறை கண்ட சோழன் வேண்டுகோளின்படி தாம் இயற்றிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் மீது திருவந்தாதி திருச்சண்டை விருத்தம், திருமும்மணிக் கோவை, திருவுலா மாலை, திருத்தொகை திருவாசகர் மீது எழுதிய திருவேகாதச மாலைஆகிய நூல்களையும் பதினெராம் திருமுறையில் சேர்ந்து வகைப்படுத்தினர் என்றும் திருமுறை கண்ட புராணம் கூறுகிறது. பெரிய புராணம் இயற்றப்பட்ட பின்னர் அது பன்னிரண்டாம் திருமுறையாக இத் தொகுதியுடன் சேர்க்கப்பட்டது.

ஆயினும் ஒன்பதாம் திருமுறையில் வழங்கும் திருவிசைப்பா பதிகங்களை இயற்றிய சில ஆசிரியர்கள் நம்பியாண்டார் நம்பி காலத்திற்குப் பிற்பட்ட காலத்தினர் ஆதலாலும் தாம் போற்றிப் பரவும் முன்னேர் நூல்களுடன் நம்பி. தாம் இயற்றிய நூல்களையும் சேர்த்து ஒரு திருமுறையாக்கியிருக்க மாட்டார். ஆதலாலும் எட்டு முதல் உள்ள திருமுறை வகுப்பு நம்பியாண்டார் நம்பியால் அமைக்கப் பெற்றது அன்று என்று கூறுவது மிகவும் பொருத்தமான கருத்தாகும். மூவர் பாடிய தேவாரங்களை மட்டுமே நம்பியாண்டார் நம்பி ஏழு திருமுறைகளாக வகுத்தருளினுர் என்பது இதனுல் போதரும்.

எட்டாந் திருமுறை முதல் பதினென்றும் திருமுறை வரையுள்ள திருமுறைகள் நம்பியாண்டார் நம்பி காலத்திற்குப் பின்னர் வாழ்ந்த சிவ நேசச் செல்வர்களாலும் பெரிய புராணம் எழுந்த பின்னர் அந்நூல் பன்னிரண்டாம் திருமுறையாக அக் காலத்து வாழ்ந்த சிவநேசச் செல்வர்களாலும் வகுக்கப் பெற்றிருக்கலாம்.

பதினெரு திருமுறை வரை நம்பியாண்டார் நம்பியே வகுத்தருளினுர் எனத் திருமுறைக் கண்ட புராணம் கூறுவது 'அக்காலத்தில் வழங்கிய செய்தியை உடன்பட்டுக் கூறிய' தாகக் கொள்ளலாம்.

**பகுப்பு முறை:**

திருஞான சம்பந்தரே முதன் முதலாகத் தோடுடையச் செவியன் என இறைவனைப் பாடியமையாலும் இறைவன் திருவடியில் அவரே முதலில் கலந்தவர் ஆதலாலும் அவரது திருப் பதிகங்கள் முதல் மூன்று திருமறைகளாக வகுக்கப் பெற்றுள்ளன. என்றும், திருஞான சம்பந்தர் திருநல்லூர்ப் பெருமணத்தில் இறைவனடியில் கலந்த பின்னரே திருப்புகலூரில் அப்பர் இறைவனடியில் கலந்தாராதலால் அவரது பாடல்கள் திருஞான சம்பந்தர் அருளிய திருமுறைகளையடுத்து நான்கு முதல் ஆறுவரையுள்ளதிருமுறைகளாகவும், இருவருக்கும் காலத்தால் பிற்பட்ட சுந்தரர் தேவாரங்கள் அவற்றிற்குப் பின்னர் ஏழாம் திருமுறையாகவும் வகுக்கப் பெற்றன என்றும், தேவார ஆசிரியர் மூவரும் ஒருவர் பின் ஒருவராகச் சிவ பதமடைந்த கால முறையே இத்தகைய வரிசை முறைக்குக் காரணமாகும் என்றும் அறிஞர் கூறுவர்.

**திருமுறை நூல்கள்:**

பன்னிருத் திருமுறைகளில் முதல் மூன்று திருமுறைகள் திருஞான சம்பந்தர் பாடிய தேவாரப் பாடல்கள். அப்பர் பெருமான் பாடிய தேவாரப் பாடல்கள் நான்கு முதல் ஆறு திருமுறைகளாக அமைந்துள்ளன. சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடிய தேவாரப் பாடல்கள் ஏழாம் திருமுறையாக அமைக்கப் பெற்றுள்ளன. சைவ சமய குரவர்கள் நால்வருள் ஒருவரான மாணிக்க வாசகர் பாடிய திருவாசகமும் திருக்கோவையும் எட்டாம் திருமுறையாக உள்ளன. திருமாளிகைத் தேவர், சேந்தனுர், கருவூர்த் தேவர், பூந்துருத்தி நம்பி காட நம்பி, கண்டராதித்தர், வேணுட்டடிகள், திருவாலியமுதனுர், புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பதின்மர் பாடிய திருவிசைப்பாப் பதிகங்கள் இருபத்தெட்டும், அவருள் சேந்தனுர் பாடிய திருப்பல்லாண்டாகிய பதிகம் ஒன்றும் ஆக இருபத்தொன்பது பதிகங்களும் ஒன்பதாம் திருமுறையில அமைந்துள்ளன. திருமூல நாயனுர் அருளிச் செய்த திருமந்திரம் பத்தாம் திருமுறை என்று வழங்கப் படும்.

பதினெராம் திருமுறையில் திருவாலவாயுடையார் அருளிச் செய்த திருமுகப்பாசுரம் முதலாக நம்பியாண்டார் நம்பியின் திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை ஈருக உள்ள நாற்பது நூலகள் அடங்கியுள்

ளன. இந்நூல்களை இயற்றிய ஆசிரியர்கள் திருவாலவாயுடையார், காரைக் காலம்மையார், ஐயடிகள் காடவர் கோன், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீர தேவ நாயனார், கல்லாட தேவ நாயனார், கபில தேவ நாயனார், பரண தேவ நாயனார், இளம் பெருமான் அடிகள், அதிரா அடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி என்னும் பன்னிரு அருளாளர்களாவர்.

**திருமுறை நூல்களின் காலம்:**

பன்னிருத் திருமுறைகளில் உள்ள திருப்பாடல்களில் மொத்த எண்ணிக்கை ஏறத்தாழப் பதினெண்ணாயிரம் ஆகும். இவற்றைப் பாடிய ஆசிரியர்கள் இருபத்தெழுவர். இவர்களுள் காலத்தால் முற்பட்டவர்கள் திருமூலர், காரைக் காலம்மையார் முதலியோர். காலத்தால் பிற்பட்டவர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் பெருமான். எனவே கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையுள்ள காலத்தை சைவத் திருமுறைகள் எழுந்த காலமாகக் கொள்ளலாம்.

**தேவாரப் பாடல்களின் எண்ணிக்கை:**

தேவாரப் பதிகங்கள் சம்பந்தர் பாடிய 1600 பதிகங்களும், திருநாவுக்கரசர் பாடிய 4900 பதிகங்களும் சுந்தரர் பாடிய 3800 பதிகங்களும் ஆக 10,300 பதிகங்கள் என்று கூறுவர். ஆயினும் நம்பியாண்டார் நம்பி தில்லையில் செல்லரித்துக் கிடந்த ஏடுகளைச் செம்மைப்படுத்தி, திருஞான சம்பந்தர் தேவாரப் பதிகங்கள் 384-ம் திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள் 310-ம் சுந்தரர் தேவாரப் பதிகங்கள் 100-ம் மட்டுமே தொகுத்தார் என்பதை,

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிக
முந்நூற்று
எண்பத்து நான்கினால் இலங்குதிரு
முறைமூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ்
மூன்றினால்
வண்பெற்ற முறையொன்று நூற்
றினால் வன்றொண்டர்

எனவரும் பகுதியால் அறியலாம். ஆயினும் இப்பதிகங்களை முதலில் அச்சிட்டபோது திருஞான சம்பந்தர் பாடியனவாக 383 திருப்பதிகங்களே இருந்தன. ஏட்டுச் சுவடிகளில் காணப்படாமல் எஞ்சிய திருவிடைவாய் பதிகம் அவ்வூர் கல்வெட்டினின்று படி எடுக்கப்பட்டுப் பின்னர் சேர்க்கப்பட்டது. மேலும் அப்பர் பாடியனவாகக் குறிப்பிடப் பெற்றுள்ள 310 திருப்பதிகங்கள் இன்று 312 திருப்பதிகங்களாக அச்சிடப் பெற்றுள்ளன. எனவே சம்பந்தர் பாடியவை 384 திருப்பதிகங்கள், சுந்தரர் பாடிய 100 திருப்பதிகங்கள், மொத்தமுள்ள இவ்வெழு நூற்றுத் தொண்ணூற்றாறு திருப்பதிகங்கள் ளுட்டு இன்றுள்ள மொத்த பாடல்களின் எண்ணிக்கை 8250 ஆகும்.

**மணவிற் கூத்தன் பணி:**

நம்பியாண்டார் நம்பி தொகுத்த தேவாரத் திருப்பாடல்களைச் செப்பேடுகளில் எழுதிச் சேமமுறக் காத்தவன் முதற் குலோத்துங்க சோழனது படைத்தலைவர்களுள் ஒருவனான வரைய மணவிற் கூத்தன் காலிங்கராயன் என்பான். இச்செய்தியைத் தில்லைக்கல்வெட்டொன்றால் அறிகின்றோம்.

**தேவாரம் சொல் வழக்கு:**

மூவர் முதலிகள் எனக்குறிப்பிடப் பெறும் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் அருளிய திருப்பாடல்களைத் தேவாரம் என்று குறிப்பிடுவர். தேவாரம் என்ற தொடரைத் தேவ+ஆரம் எனப் பிரித்து இறைவனுக்கு மாலையாக அமைந்தது என்றும் தே+வாரம் எனப் பிரித்து தெய்வத்திடைத்து அன்பை விளைவிப்பது என்றும் இருவகையாகப் பொருளுரைப்பர். கி. பி. பதினொராம் நூற்றாண்டுக்குப் பின் தேவாரம் என்ற சொல் வழிபாடு என்னும் பொருளில் வழங்கியதென்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள. அதற்கு முன்பு அச்சொல் அப்பொருளில் ஆளப்பட்டுள்ளமைக்கு



சபரிமலைக்கு செல்லும் வழியில் உள்ள பம்பாநதி.

இலக்கிய கல்வெட்டுச் சான்றுகள் எதுவும் இல்லை. கி. பி. 14-ம் நூற்றுண்டில்தான் மூவர் திருப்பதிகங்களைத் தேவாரம் என்ற சொல்லால் குறிப்பிடும் வழக்கம் ஏற்பட்டது. அதற்கு முன்னர் மூவர் திருப்பதிகங்களைத் தேவாரம் என்ற சொல்லால் குறிப்பிட்டதற்குச்சான்றுகள்இல்லை. கி. பி. 14-ம் நூற்றுண்டில் மல்லிநாத சம்புவராயன் காலத்தில் வாழ்ந்த புலவர் பெருமக்களான இரட்டையரே மூவர் திருப்பதிகங்களைத் தேவாரம் என்ற சொல்லால் முதல் முதலில் குறிப்பிட்டுள்ளனர்.

மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரஞ் செய்த திருப்பாட்டும்

என வருதல் காண்க. இவர்களுக்குப் பின்னர் வந்த சைவ எல்லப்ப நாவலர் தாம் பாடிய திருவருணைக் கலம்பகத்தில்,

"வாய்மை வைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்றுள் எம் உயிர்த்துணையே!

என்று பாடியுள்ளது அறியத் தக்கது. ஆயினும் கி. பி. 13-ம் நூற்றுண்டில் வாழ்ந்த சாரங்க தேவர் என்னும் வடநாட்டு இசை நூலாசிரியர் மூவர் திருப்பதிகங்களில் காணும் தமிழ்ப் பண்களைத் 'தேவார வர்த்தநீ' என்று தனது சங்கீத ரத்னகாரம் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளதால் மூவர் திருப்பதிகங்களைத் தேவாரம் என்ற சொல்லால் குறிப்பிடும் வழக்கம் கி.பி. 13-ம் நூற்றுண்டுக்கு முன்னரே எழுந்தது என்பர் அறிஞர்.

**பண் முறையும் தலமுறையும்:**

மூவரும் பாடிய தேவாரத் திருப்பதிகங்களை இருவகையாக வகுத்துக் காட்டுவது மரபு. மூவரும் பாடிய திருப்பதிகங்களில் அமைந்த பண்களை வகைப்படுத்தி, ஒவ்வொரு பண்ணுக்கும் உரிய திருப்பதிகங்களை முறையாக தொகுத்து ஏழு திருமுறைகளாக அமைந்திருப்பது பண்முறை என்று கூறப்படும். இதுவே பழைய முறை என்பர். பின்னர் திருப்பதிக் கோவையில் கோயில் திருவேட்களம், நெல்வாயில், கழிப்பாலை எனக் குறித்த முறையை யொட்டி தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களையெல்லாம் தில்லைப் பெருங்கோயில் முதலாக வரிசைப்படுத்தி அவ்வத்தலங்களுக்குரிய தேவாரப் பதிகங்களை ஏழு திருமுறைப்பாகு பாட்டிற்கேற்ப முறைப்பட சேர்த்து அமைந்தது தலமுறை எனப்பெறும். புண்ணியத் திருத்தலங்களை வழிபட விரும்பிய சிவநேசச் செல்வர்கள் தாம் வழிபட விரும்பிய ஒவ்வொரு தலத்திற்கும் அமைக்கப் பெற்ற இத் தலமுறை வகுப்பு பிற்காலத்தில் தோன்றியதாகும் என்பர்.

**தேவாரத் திரட்டுகள் :**

தேவாரம் ஏழு திருமுறைகளும் தொகுத்து வெளியிடப் பெற்றிருப்பதுடன் மட்டுமின்றி தேவாரத்தின் சில, பல பதிகங்கள் மட்டும் கூடத் திரட்டப்பட்டு வெளி வந்துள்ளன. சிவாலய முனிவர்கள் பொருட்டு தேவாரத்திலிருந்து 25 பதிகங்களை மட்டும் அகத்தியர் தேர்ந்தெடுப்பார் என்பர். இத்திரட்டுக்கு அகத்தியர் தேவார திரட்டு என்று பெயர்.

சைவ சித்தாந்தக் கருத்துக்களுக்குச் சான்றுக 99 தேவாரப் பாக்களை மட்டும் திருவருட்பயன் என்னும் சைவ சித்தாந்த சாத்திர முறைப்படி அமைத்துத் திரட்டபட்ட தொகுப்புக்குத் தேவார அருண்முறைத் திரட்டு என்று பெயர். திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் தேவாரப் பதிகங்களைப் பாடித் தங்கள் வாழ்க்கையில் அரிய அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தியுள்ளனர். இத்தகைய அற்புதத் தேவாரப் பதிகங்கள் முதலாம் திருமுறையில் எட்டும், இரண்டாம் திருமுறையில் ஆறும், 3-ம் திருமுறையில் 10-ம், 4-ம் திருமுறையில் 7-ம், 5-ம் திருமுறையில் 3-ம், 6-ம் திருமுறையில் 4-ம், 7-ம் திருமுறையில் 27-ம் உள்ளன. இவ்வறுபத்தைந்து திருப்பதிகங்களையும் இணைத்து அற்புதத் தேவாரத் திரட்டு என்னும் பெயரில் வெளியிட்டுள்ளனர். அன்பர்கள், சைவ சமயாசாரியார்கள் நிகழ்த்திய அற்புதங்களை அறியவும் அத்திருப்பதிகங்களை ஓதித் தம் வாழ்விலும் நன்மை பெறவும் இத் தேவாரத் திரட்டுகள் உதவுகின்றன.

இத்திரட்டுக்களேயன்றி, பாராயணத்திற்கென்றும், நித்திய வழிபாட்டுக் கென்றும் மேலும் பல்வேறு சிறு, சிறு தேவாரத் திரட்டுகளும் வெளி வந்துள்ளன. கொள்கையினல் உயர்ந்த நிறையுடையார் அனுபவ வெளிப்பாடாக, சிவஞானப் பிழியலாக நமக்குக் கிடைத்துள்ள இத்தோத்திர நூல்களைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க இடையருது ஓதுவார் தமக்கு இறையருள் கிட்டும்; இருமைப் பயன்கள் வந்தடையும். ★



திருவண்ணமலை கோயிலின் முகப்புத்தோற்றம். சன்மிஷ்டை.

# ★ ஐப்பசியும் ஆழ்வார்களும் ★

ஆழ்வார்களுக்கெனவே ஐப்பசி வந்தாற் போல முதலாழ்வார்கள் மூவரும் ஐப்பசி மாததத்தில் அவதரித்தனர். அத்தகைய ஐப்பசி மாதம் இவர்களுக்காகவே காத்திருந்தது போல் இம்மூவரையும் ஒரே திங்களில் வெவ்வேறு நட்சத்திரங்களில் பிறக்கச் செய்கின்றது. ஒருகால் அத்திங்களுக்கும் பகவான் அருள் பெற்ற முதலாம் ஆழ்வார்கள் மூவரும் அவதரிக்கும் காலம் தெரிந்து இருக்குமோ என எண்ணத் தோன்றுகிறது.

இதனையே மணவாள மாமுனிகளார் வேறு விதமாகக் கூறுகின்றார்.

'' ஐப்பசியி லோணம், அவிட்டம் சதயமிவை
ஒப்பின நாள்கள் உலகத்திர்—எப்புவியும்
பேசும் புகழ் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்
தேசுடனே தோன்றும் சிறப்பால்—என

வாழி திருநாமத்தில் மூவர் அவதரித்த நாட்களை, மும்மணிகள் அவதரித்ததால், அவர்கள் அவதரித்த நாட்கள்சிறப்பு பெற்றன எனக் கூறுகின்றார்.

முதலாழ்வாராகிய பொய்கையாழ்வாரின் காலம் 7-ம் நூற்றாண்டு என அறிஞர்கள் பலர் தெரிவிக்கின்றனர். சிலர் அவரது காலத்தை 6-ம் நூற்றுண்டின் பின் பகுதி எனவும், சிலர் 7-ம் நூற்றுண்டின் முதற்பகுதி எனவும் கூறினும் அவரது காலத்தை நாம் 7-ம் நூற்றுண்டு எனப் பொதுவில் கொள்ளலாம்.

இவர் காஞ்சியிலுள்ள திருவெஃகா என்னும் வைணவ தலத்திலுள்ள பொய்கையிலுள்ள தாமரை மலர் ஒன்றில் 'பாஞ்ச சந்நிய' ஒளி விளக்காய் ஐப்பதித் திங்கள் சரவண நன்னாளில் அவதரித்தார். இவர் பொய்கையில் தோன்றினமையினால் பொய்கையாழ்வார் என புகழப்பட்டார். அதுவே இவரது திருப்பெயராகவும் விளங்கக் காரணமாக இருக்கலாம்.

இவர், திருமாலன்றி வேறு தெய்வமில்லை என.

'' திருமாலை யல்லது தெய்வமென்று ஏத்தேன்
வருமாறென் நம்மேல் வினை.''

என நவில்கின்றார். இறைவனுக்குப் பக்தர்கள் அமைக்கும் உருவம்தான் உருவம் என்றும், அவர்கள் விரும்பி அளிக்கும் பெயரே அவன் திருநாமம் எனவும், அடியார்கள் அவனை எப்படி சிந்தித்தாலும், அந்தப்படியே அவர்களுக்கு அவன் காட்சியளிப்பான், எனவும், மேலும் இறைவனுக்கு ஒரு


திரு கே. ஆர். ஜெயவேலு,
ஆத்தூர்


நாமமோ, ஓர் உருவமோ இல்லை என்றும் அவனை ஒரு உருவத்திலும், ஒரு நாமத்திலும் அடக்க முடியாது என பின்வரும் பாடல் ஒன்றில் நயம் பட உரைக்கின்றார்.

'' தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையா திருப்பரே
அவ்வண்ணம் ஆழியானும்''



ஸ்ரீ ஆண்டாள் கோவில், ஸ்ரீவில்லிபுத்தூர்.
திரு. வி. முத்துராமன், கோயம்புத்தூர்.

இவரால் நாம் நுகர்வது 100 பாசுரங் களடங்கிய முதாம் திருவந்தாதி ஆகும்.

இவரால் மங்களாசாசனம் பெற்ற திருக்கோயில்கள் 1. திரு அரங்கம் 2. திருக்கோவலூர், 3. திருப்பார்த் தன் பள்ளி (திருநாங்கூர்) 4. திரு வெஃகா காஞ்சி, 5. திருவேங்கடம் ஆகிய திருத்தலங்களாகும்.

இவருக்கு அடுத்ததாக வருபவர் பூதத்தாழ்வாராகும். இவரது கால மும் 7-ம் நூற்றுண்டாகும். இவர் மாமல்லையில், ஐப்பசித் திங்கள் அவிட்ட நன்னளில் குருக்கத்தி மல ரிலே 'சுதாம்சராக' அவதாரஞ் செய் தார்.

இவர் மக்களை, எம்பெருமானுக்கு உகந்த இடம் அடியார்களின் இதய மென்றும், ஆகவே பக்தி செய்யுங் கள், நாம் இருக்கிறேம், நம் உள்ளம் இருக்கிறது, பக்தி செய்ய நேரமிருக் கிறது, வாமனன் இருக்கிறன் வழி பட என மிகவும் எளிய நடையில் தெள்ளத் தெளிவாக அள்ளி வீசுகின் ருர்.

இவர் அருளிச் செய்த 100 பாசுரங் களடங்கிய இரண்டாம் திருவந்தாதி மிகவும் எளிமையாகவும், கருத் தாழம் கொண்ட இனிய வெண்பாக் களாகவும் அமைத்துள்ளதினுல் இவர் தன்னை தவம் செய்தவரென்றும், தான் தமிழன், நல்லவன் எனவும் பெருமை கொள்கிருர்.

'' யானே தவம் செய்தேன்; ஏழ்
பிறப்பும் எப்பொழுதும்
யானே தவம் உடையேன்; எம்பெரு
மானை—யானே
இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே
சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது.''

இவரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருக்கோயில்கள் 1. திரு அத்தியூர் 2. திரு அரங்கம் 3. திருக் கடன்மல்லை, 4. திருக்குடந்தை 5. திருக்கோட்டியூர் 6. திருக்கோவ லூர் 7. திருநீர்மலை 8. திருப்பாட கம் 9. திருமாலிருஞ்சோலை 10. திருவேங்கடம் ஆகிய திருத்தலங் களாகும்.

முதலாழ்வார் மூவரில் எஞ்சியிருப் பவர் பேயாழ்வார். இவரது கால மும் 7-ம் நூற்றுண்டே. இவர் சென்னையிலுள்ள மயிலையில் ஆதி கேசவப் பெருமாள் கோயில் திருக் கிணற்றில் உண்டான செவ்வல்லி மலரிலே, ஐப்பசித் திங்கள் சதய நட்சத்திரத்தில் அவதரித்தார்.

இவர் திருமாலின் பேரில் தீராக் காதல் கொண்டவர். அவரது அழகை இவர் அனுபவிக்கும் விதமே அலாதி யானது. ஆங்கிலக் கவிஞரொருவன் கூறியதைப் போல, அதாவது இறை வனின புகழைப்பற்றி எழுத வேண்டு மானுல் இந்த உலகின் நிலப்பரப் பையே காகிதமாகக் கொண்டு, கடலையே மையாகக் கொண்டு, காடு களிலுள்ள மரங்களையெல்லாம் கொண்டு எழுதுகோலாக செய்து இறைவனின்மகிமையை எழுதினுலும் நிறைவு பெருது என்பதைப் போல இவர், இறைவனின் சிறப்பைப் பேச ஆயிரம் நாவு படைத்த ஆதிசேடனு லும் ஆகாது. ஆகவே அவரவர் பேசும் திறனுக்கேற்பவே வர்ணிக்க முடியும். முடிவாக எம்பெருமானின் பெருமையை எவ்வளவு பேசினுலும் அவ்வளவிற்கும் இடம் கொடுக்கும் என்று பின்வரும் பாடலினுல் நயம்பு கின்ருர்.

'' பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்
வளவே
வாச மலர்த்துழாய் மாலையான்—
தேசுடைய



சிவஸ்தலம், திருவெற்றியூர் (சென்னை)
திரு. வி. முத்துராமன், கோயம்புத்தூர்.

சக்கரத்தான் சங்கினன் சார்ங்கத்
தான் பொங்கரவே
வக்கரனைக் கொன்றான் வடிவு''
என்றார்.

இவர் இயற்றிய 100 பாசுரங்களை டங்கிய மூன்றாந் திருவந்தாதி மிகவும் எளிமையாகவும், சொற்சுவை பாயும், பொருட்சுவையாயும், நேரிசை வெண்பாகவும் அமைந்துள்ளன அத்தகைய பாடலுள் ஒன்று இதோ.

'' திருக்கண்டேன் பொன்மேனி கண்
டேன் திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன்—
செருக்கிளரும்
பொன் ஆழிகண்டேன் புரிசங்கம்
கைக்கண்டேன்
என் ஆழி வண்ணன்பால் இன்று.''

திருமழிசை ஆழ்வாரை வைணவ உலகுக்கு அளித்த பெருமை பேயாழ்வாரையேச் சாரும். அத்தகைய நிகழ்ச்சியொன்றினை இனி நாம் காண்போம்.

திருமழிசையார் சிவவாக்கியர் எனும் திருநாமத்தினைப் பூண்டு சைவ நூல்களைக் கற்று சிவத்தலங்கள் பல சென்று சிவனைத்தரிசித்துப்பாடி வருகின்ற நிலையில் இருந்த இவரை ஒரு நாள் நமது பேயாழ்வார் மயிலையில் உள்ள நந்தவனம் ஒன்றில் காண நேர்ந்தது.

பேயாழ்வார் திருமழிசையாரைக் காணாதது போல அங்குள்ள செடிகளைத் தலைகீழாக நட்டு, அறுந்த முடியிட்ட கயிற்றால் கட்டிய ஓட்டைப் பாண்டத்தில் தண்ணீர் கொண்டு அச்செடிகளுக்கு விட்டார்.

இதனைக் கண்ணுற்ற திருமழிசையார் நகைத்தார். பேயாழ்வார் ஒன்றும் அறியாதவர் போல நகைப்பின் காரணம் கேட்டார். தலைகீழாகச் செடிகளை நட்டு, அறுந்த முடியிட்ட கயிற்றால் கட்டிய சல்லிக் குடம் கொண்டு தண்ணீர் ஊற்றும் பக்திச் செயலைக்கண்டே தாம் நகைப்பதாகக் கூறினார்.

பேயார், தாம் செய்யும் செயலின் உட்பொருள் காணாத அவரது நிலையைக் கண்டு வியந்தார். உடனே திருமழிசையார் அதன் உட்பொருளை விளக்க வேண்டினார்.

அறுந்து முடியிட்ட கயிறு அவருடைய மதம் விட்டு மதம் மாறும் நிலையினைக் குறித்ததென்றும், சல்லிக் குடத்துள் இட்ட நீர் தங்காது கழிதல் போல் எம்மதக் கொள்கையும் அவர் மனத்தில் நிலையாது நீங்குதலைக் குறிப்பதென்றும், செடியைத் தலைகீழாக நட்டமை எது முதற்பொருள் என அறியாத நிலையை உணர்த்துவது என்றும் விளக்கினார்.

உடனே திருமழிசையார் ஆனந்தக் கண்ணீர் சொரிய அவரது பாதக் கமலங்களைப் பற்றி குருவாக ஏற்றார். ''சைவ, சமண மதங்களில் புகுந்தும் முதற்பொருளைக் காணாத யான் இறைவனருளாலேயே இறைநிலை அறியச் சமயம் வாய்க்கும்'' என்று வியந்தார். திருவல்லிக்கேணி பகுதியில் திருமழிசையார் யோக நித்திரையில் ஆழ்ந்தார்.

பேயாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருக்கோயில்கள் 1. திருஅட்டபுயகரம் (காஞ்சி) 2. திருஅத்தியூர் (காஞ்சி) 3. திருஅரங்கம், 4. திருஅல்லிக்கேணி, 5. திருக்குடந்தை, 6. திருக்கோட்டியூர், 7. திருப்பார்த்தன்பள்ளி, 8. திருமாலிருஞ்சோலை, 9. திருவிண்ணகரம், 10. திருவெஃகா, 11. திருவேங்கடம் ஆகியத்தலங்களாகும்.

இத்தகு ஆழ்வார்கள் மூவரும் ஒருவரை ஒருவர் அறியாது, ஒரு நாள் இருந்த ஊரில் மறுநாள் தங்காது ஊர்கள் சுற்றி வந்தனர்.

இறைவனின் திருவுள்ளத்தால் இவ்மூவரும் திருக்கோவலூருக்கு ஏகினர். மூவரும் தனித்தனியாகத் திருக்கோவலூர் சென்றடைந்தனர். இரவு வந்தது. மழை 'சோ' எனக் கொட்டிற்று. முதலில் பொய்கையார் ஒரு திருமாலடியவரின் திருமாளிகைக்குச் சென்று அன்றிரவைக் கழிக்க இடம் கேட்டார். அவரும் இடைக் கழியில் இடம் தந்தார்.

பூதத்தார் பின்பு அம்மாளிகை வந்தடைந்து ஒதுங்க இடம் வினவப்



கங்கை கொண்ட சோழபுரம்
திரு: வி. முத்துராமன், கோயம்புத்தூர்;

பொய்கையார், 'வாரும் இவ்விடைக் கழியில் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்' என்றனர். அவ்வாறே பூதத்தார் சென்று பொய்கையா(ருட)னிருந்தனர். சற்று நேரத்தில் பேயாரும் அம்மாளிகையே வந்தடைந்து இரவு தங்க இடம் வேண்டினர். பொய்கையார், 'அன்பரே வாரும். இங்கு ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம். அவ்வளவே இடம் எனவும்'' 'பரவாயில்லை.' எனப்பேயரும் அவர்களுடன் சேர்ந்து நின்றனர். ஒருவரை ஒருவர் விசாரித்து அறிந்து ஆனந்த பரவசமடைந்தனர்.

மழையும் வலுத்தது; இருளும் சூழ்ந்தது. சிறிது நேரத்தில் எம்பெருமானும் அவர்கள் அறியாவண்ணம் அவர்களுடைப் புகுந்து நெருக்கத்தை உண்டாக்கினர்.

நெருக்கம்மிகப் பொய்கையாழ்வார் அதற்குக் காரணமறிய ஒரு சொல் மாலைச் சுடர் விளக்கேற்றினார். அந்த விளக்கில் நெருக்கியவரைக் காண முயன்றார்.

'' வையம் தகளியா வார்கடலே நெய்
ஆக,
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன்
சொன்மாலை
இடர் ஆழி நீங்குகவே'' என்று.

பூமியையே அகலாக்கிக் கடல் நீரையே அதிலிடும்நெய்யாக்கிச் சூரியனையே திரியாக்கி தீபம் ஏற்றினார். காலையிலெழும் சூரியோதயத்தை இவர் நம்மனக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார். சற்று இருட்டில் ஞான ஒளி உண்டாவதைக் கண்ட பூதத்தார், அன்பையே அகலாக்கி ஆர்வத்தை நெய்யாக ஊற்றி சிந்தையையே திரியாக்கி இட்டு ஞானச் சுடர் விளக்கேற்றினார்.

'' அன்பே தகளியா, ஆர்வமே நெய்ஆக
இன்பு உருகு சிந்தை இடுதிரியா—
நன்புருகி
ஞானச் சுடர் விளக்கேற்றினேன்
நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்''

பக்தர்க்கு இரங்கிய பரந்தாமன், சங்கு சக்கரத்துடன் தோன்றிப் பெருஞ்சோதியை உண்டாக்கினார். அதைப் பேயார் கண்டு களித்தார். மூவரும் சுடராழியானைக் கண் குளிரக் கண்டனர். வலமார்பினில் வாழும் மங்கையையும் கண்டனர்.

பேயார் இந்த அனுபவத்தையே,

'' திருக்கண்டேன்; பொன்மேனி கண்
டேன்; திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்—
செருக்கிளரும்
பொன்ஆழி கண்டேன் புரிசங்கம்
கைக்கண்டேன்
என் ஆழி வண்ணன் பால் இன்று''

என மகிழ்வுடன் பாடுகிறார்.

இந்த ஐப்பசித் திங்களில் அத்தகு ஆழ்வார்களை நாம் நமது நெஞ்சங்களில் இருத்தி இறை வழிபாடு செய்து வந்தால் முக்தியடைவது நிச்சயம்.

ஆழ்வார்களின் செயல்களை நாம் செவியுறும் பொழுது நமது உள்ளம் நம்மை அறியாமலேயே எங்கோ பறந்து செல்கின்றது. அத்தகு இன்பத்தை அனைவரும் அடைய ஆழ்வார்களை நெஞ்சில் நிறுத்தி துதிப்போமாக.



மதுரை கிழக்கு ராஜகோபுரமும், அம்மன் சன்னிதி நுழைவு வாயிலும்
திரு. வி. முத்துராமன், கோயம்புத்தூர்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED
AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

